ஸ்ரீஹரி:

792▲

# முக்கியமான எச்சரிக்கை

आवश्यक चेतावनी ( तमिल )




ஸ்வாமி ராம்ஸுகதாஸ்

|| ஶ்ரீஹரி: || 792

# முக்கியமான எச்சரிக்கை

आवश्यक चेतावनी (तमिल)

*த்வமேவ மாதா ச பிதா த்வமேவ*
*த்வமேவ ப$_3$ந்து$_4$ஶ்ச ஸக$_2$ா த்வமேவ ।*
*த்வமேவ வித்$_3$யா த்$_3$ரவிணம் த்வமேவ*
*த்வமேவ ஸர்வம் மம தே$_3$வதே$_3$வ ॥*

*ஆருயிர் அன்னையும் நீயே, அருமைத் தந்தையும் நீயே,*
*உறவும் சுற்றமும் நீயே, உற்ற நண்பனும் நீயே,*
*கற்கும் கல்வியும் நீயே, சேர்க்கும் செல்வமும் நீயே,*
*அனைத்தும் ஆன என்றன் ஆதிதேவனும் நீயே!*

ஆக்கியோர்

**சுவாமி ராம்ஸுகதாஸ்**

॥ ஸ்ரீஹரி: ॥

# பொருளடக்கம்





॥ ஸ்ரீஹரி: ॥

## தேவநாகரி எழுத்துக்கள் – சில குறிப்புகள்

ஒரு மொழியின் சொல்லை இன்னொரு மொழியின் எழுத்துக்களால் எழுதுவதை எழுத்துப்பெயர்ப்பு **(Transliteration)** என்று அழைக்கிறோம். ஒரு மொழியிலுள்ள சொல்லின் பொருளை மற்றொரு மொழியில் கூறுவதை மொழிபெயர்ப்பு **(Translation)** என்று அழைக்கிறோம்.

சம்ஸ்கிருதச் சொற்களைப் பிழையின்றி உச்சரிக்க, முறையாக சம்ஸ்கிருதம் கற்றவர்களிடமிருந்து அறிந்துகொள்ள முயற்சிக்க வேண்டும்.

ஆங்கில எழுத்துக்களின் துணைகொண்டு *2, 3, 4* என்னும் குறியீடுகளுடன் சம்ஸ்கிருத எழுத்துக்களுக்கு நிகரான தமிழ் ஒலி வடிவங்கள் இங்கு தரப்பட்டுள்ளன.

| | | | | |
|---|---|---|---|---|
| अ அ | आ ஆ | इ இ | ई ஈ | उ உ |
| ऊ ஊ | ऋ ரி | ॠ ரீ | ॡ ல்ரு | ए ஏ |
| ऐ ஐ | ओ ஓ | औ ஔ | | |

| | | | | |
|---|---|---|---|---|
| क க [ka] | ख க$_2$ [kka] | ग க$_3$ [ga] | घ க$_4$ [gha] | ङ ங |
| च ச [ca] | छ ச$_2$ [cha] | ज ஜ [ja] | झ ஜ [jha] | ञ ஞ |
| ट ட [ta] | ठ ட$_2$ [tta] | ड ட$_3$ [da] | ढ ட$_4$ [dda] | ण ண |
| त த [tha] | थ த$_2$ [thha] | द த$_3$ [dha] | ध த$_4$ [dhha] | न ந,ன |
| प ப [pa] | फ ப$_2$ [pha] | ब ப$_3$ [ba] | भ ப$_4$ [bha] | म ம |
| य ய | र ர | ल ல | व வ | |
| स ஸ [sa] | ष ஷ [sha] | क्ष க்ஷ [ksha] | ह ஹ [ha] | |
| श ஶ [s̄ā] | ज्ञ க்ஞ [gna] | ऋ ரு [ri] | | |

**'श'** என்ற எழுத்து *'ஶ'* என்று எழுத்துப்பெயர்ப்பு செய்யப் பட்டுள்ளது. இந்த *'ஶ'* என்னும் எழுத்து *'பிசகு', 'கசடு'* என்னும் சொற்களில் வரும் *'ச'*வைப் போன்று ஒலிக்கும்.

சம்ஸ்கிருத–தமிழ் எழுத்துப்பெயர்ப்பில் **(Transliteration)** கொடுத்துள்ள எழுத்துக்கள் எழுத்துப்பெயர்ப்பில் மட்டும்

பயன்படுத்தப்பட்டுள்ளன. மொழிபெயர்ப்பில், வழக்கத்தில் உள்ள தமிழ் எழுத்துக்களே பயன்படுத்தப்பட்டுள்ளன. உதாரணமாக 'सुखं' என்ற சொல் எழுத்துப்பெயர்ப்பில் *'ஸுக$_2$ம்'* என்றும், மொழிபெயர்ப்பில் *'சுகம்'* என்றும் எழுதப்பட்டுள்ளது.

சம்ஸ்கிருதத்தில் உள்ள உயிரெழுத்தான 'ऋ' என்பது உயிரெழுத்தாக வரும்பொழுது *'ரி'* என்றும், உயிர்மெய் எழுத்தாக வரும்பொழுது 'ரு' என்றும் உச்சரிக்கப்படுகிறது. (உ–ம்.:– **ऋषि** – *ரிஷி*, **कृत्वा** – *க்ருத்வா*) இந்த 'ரு' என்னும் எழுத்து *'எருது'*, *'விருது'* என்னும் சொற்களில் வரும் 'ரு'வைப் போன்று ஒலிக்கும்.

'ञ' என்ற எழுத்து 'ஞ' என்றும், 'ज्ञ' என்ற கூட்டெழுத்து 'க்ஞ' என்றும் எழுத்துப்பெயர்ப்பு செய்யப்பட்டுள்ளன. 'ञ' என்ற எழுத்தில் துவங்கும் சொற்களில்லை.

ஒரு சொல்லிற்கு மேல் இருக்கின்ற புள்ளியானது *'ம்'* என்னும் எழுத்தைக் குறிக்கிறது. (உ–ம்.:– सुखं – *ஸுகம்*)

ஒரு சொல்லின் இறுதியில் மேலும் கீழும் வருகின்ற இரு புள்ளிகள் (:) **'விஸர்கம்'** என்று அழைக்கப்படுகிறது. இதன் உச்சரிப்பு, இதற்கு முன் வரும் எழுத்தைப் பொறுத்து அமையும். உதாரணம் பின்வருமாறு :–

| | | | | |
|---|---|---|---|---|
| **भवन्तः** | – | ப$_4$வந்த: | – | ப$_4$வந்தஹ |
| **स्थितिः** | – | ஸ்தி$_2$தி: | – | ஸ்தி$_2$திஹி |
| **प्रभुः** | – | ப்ரபு$_4$: | – | ப்ரபு$_4$ஹு |
| **गुणैः** | – | கு$_3$ணை: | – | கு$_3$ணைஹி |
| **भ्रुवोः** | – | ப்$_4$ருவோ: | – | ப்$_4$ருவோஹோ |

சம்ஸ்கிருதச் சுலோகங்களில் சில இடங்களில் 'ऽ' அல்லது 'ऽऽ' என்னும் குறியீடுகளைக் காணலாம். இதற்கு **'அவக்$_3$ரஹம்'** என்று பெயர். இந்த இடங்களில் முறையே **'அ'**, **'ஆ'** என்னும் எழுத்துக்கள் தொக்கி நிற்கின்றன என்று பொருள் கொள்க.



## ॥ ஸ்ரீஹரி: ॥

ஸர்வே ப$_4$வந்து ஸுகி$_2$ந:

ஸர்வே ஸந்து நிராமயா: ।

ஸர்வே ப$_4$த்$_3$ராணி பஶ்யந்து

மா கஶ்சித்$_3$ து$_3$:க$_2$பா$_4$க்$_3$ ப$_4$வேத் ॥

"அனைவரும் இன்பம் பெற்று வாழ்க; அனைவரும் நோயற்று வாழ்க; அனைவருக்கும் மங்களமே உண்டாகட்டும்; ஒருவரும் சிறிதுகூடத் துன்புறக் கூடாது."



॥ ஸ்ரீஹரி: ॥

# 1. முக்கியமான எச்சரிக்கை

(கருத்தூன்றிப் படித்துச் சிந்தித்துப் பார்க்கவும்)

1. குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டங்களால், வாழ்க்கையைச் சொகுசாக நடத்துவதற்குத் தேவையான பொருட்கள் பெருகி விடவில்லை. ஆனால், சமுதாயத்தின் பயங்கரமான வீழ்ச்சிக்குக் காரணமான இழிசெயல்கள் நிச்சயமாகப் பெருகியிருக்கின்றன.

2. வாழ்க்கையைச் சுகமாக நடத்துவதற்குத் தடையாயுள்ள வேலையின்மை, வறுமை போன்ற துன்பங்களுக்குக் காரணம், மக்கள் தொகைப் பெருக்கமன்று. மக்களின் சுகபோக விருப்பம் அதிகரித்துவிட்டதுதான். சுகபோக வாழ்க்கையில் அதிக விருப்பம் ஏற்பட்டுவிட்டதால், மனிதன் ஓய்வு விரும்பியாக, சோம்பேறியாக, வேலை செய்ய விருப்பமற்றவனாக மாறுகிறான். அதாவது, உல்லாச வாழ்க்கைக்குத் தேவைப்படும் பொருட்களை அதிகமாகப் பயன்படுத்துகிறான் (செலவழிக்கிறான்). அதே சமயம், அத்தியாவசியப் பொருட்களைக் குறைவாக உற்பத்தி செய்கிறான்.

3. குடும்பக் கட்டுப்பாட்டு முறைகளைக் கடைப்பிடிப்பதற்கு என்ன காரணம்? மனிதனுக்கு 'ஈசுவரன் எல்லோரையும் காப்பாற்றுவான்' என்று நம்பும் அளவிற்கு, ஈசுவரனிடமும் நம்பிக்கை இல்லை; 'என்னுடைய முன்வினைப்படிதானே எல்லாம் நடக்கும்?' என்று, கர்மபலனிலும் நம்பிக்கை இல்லை; 'என்னுடைய முயற்சியால் நிறைய சம்பாதித்து, என் குடும்பத்தைக் கட்டிக் காப்பேன்' என்று உறுதிகொள்ளும் அளவுக்குத் தன் முயற்சியிலும் அவனுக்கு நம்பிக்கை இல்லை!

4. தன்னுடைய நாட்டில் பிறந்துள்ள ஒவ்வொரு குடிமகனும், நல்ல வாழ்க்கை நடத்துவதற்குத் தேவையான

ஏற்பாடுகளைச் செய்வதுதான் அரசாங்கத்தின் கடமையே தவிர, யாருமே பிறவி எடுக்கவிடாமல் செய்வது, அரசாங்கத்தின் கடமையன்று! பிறவி எடுக்கவிடாமல் செய்வது, அரசு தன் தோல்வியை ஏற்றுக் கொள்வதாகும். நல்வாழ்வுக்குத் தேவையான ஏற்பாடுகளைச் செய்ய முடியாத, தன் கையாலாகாத்தனத்தை ஒப்புக் கொள்வதாகும்.

5. உடலுக்கேற்ற சட்டை என்பது சரி. சட்டை அளவு சிறிதாக இருந்தால், அதைப் பெரிதாக்கிக் கொள்ள வேண்டுமே தவிர, உடலையா வெட்டிச் சிறிதாக்கிக் கொள்வது? மக்களுடைய நல்வாழ்வுக்கு அத்தியாவசியமான பொருட்களின் உற்பத்தியை அதிகரிக்காமல், மக்கள் தொகையைக் குறைப்பது என்பது, சட்டை அளவுக்கு உடம்பைக் குறைத்துக் கொள்ளும் கதை போன்றதே. உணவுக் கூடத்திற்கு அதிகமானோர் வந்து விட்டார்கள் என்றால், இன்னும் அதிக உணவு சமைக்காமல், தயாரான உணவுக்கு மேல் வந்தவர்களை வெட்டிச் சாய்த்து விடுவதற்கு இது ஒப்பாகும் என்றும் சொல்லலாம்.

6. ஜீவனையே மனிதப் பிறவி எடுக்க விடாமல் செய்துவிட்டு, உணவுப் பொருட்களின் அதிக விளைச்சலுக்கு முயற்சி மேற்கொள்வது எப்படி இருக்கிறது என்றால், ஒரு குழந்தையைத் தாயின் கருவில்கூட வராமல் செய்துவிட்டு, தாய்ப்பாலைப் பெருக்குவதற்கு முயற்சி செய்வது போல் இருக்கிறது.

7. மரங்கள் அதிகமாக உள்ள இடத்தில், மழை அதிகமாகப் பெய்கிறது. அதுபோல, மக்கள்தொகை அதிகமானால் உணவுப் பொருட்கள் அதிகமாகாவா? கண்ணால் பார்க்கிறோம். முன்பு, ஜனத்தொகை குறைவாக இருந்தபோது தானியங்கள் வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டன. ஆனால், இப்போது மக்கள்தொகை அதிகமாகியுள்ளபோது, தானியம், பழம் முதலிய பொருட்கள் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இது கண்கூடு.

8. தேவைதான் புதிய கண்டுபிடிப்புகளின் தாய். மக்கள்தொகை பெருகினால், அதன் பராமரிப்புக்கான வழிமுறைகள் பெருகுகின்றன; உணவுப் பொருள் உற்பத்தி பெருகும்; பிற பொருட்களின் உற்பத்தியும் பெருகும்; தொழில்களும் பெருகும். அப்புறம், மக்கள்தொகைப் பெருக்கத்தைப் பற்றிய கவலை எதற்கு?

9. மனிதனிடம் வயிறு மட்டும் இல்லை; இரண்டு கைகள், இரண்டு கால்கள், ஒரு தலையும் இருக்கின்றன. அதனால், அவன் தன்னுடைய தேவைகளை மட்டுமல்லாமல், இன்னும் பலரையும் பேணிப் பராமரிக்க முடியும். அப்புறம், மக்கள்தொகைப் பெருக்கத்தைப் பற்றிய கவலை எதற்கு?

10. உற்பத்தியைப் பெருக்க விரும்புகிறார்கள். ஆனால், உற்பத்தி செய்வோரைக் குறைத்துக் கொண்டிருக்கிறார்கள். என்ன புத்திசாலித்தனம்!

11. ஒன்றிரண்டு குழந்தைகள் இருந்தால் வீட்டுவேலைக்கே அவை போதா என்னும்போது, சமுதாயப் பணிகளைச் செய்வதற்கு ஆள் ஏது? உழவுத் தொழிலைச் செய்வது யார்? படையில் சேருவது யார்? நல்வழியைப் போதிக்கும் அருளாளர் ஆவது யார்? வயோதிகப் பெற்றோர்களுக்குப் பணிவிடை செய்வது யார்?

12. பிறப்புக்கு மட்டும் தடை; இறப்புக்குத் தடை ஏதுமில்லை! இது என்ன புத்திசாலித்தனமோ? இறப்பைக் கட்டுப்படுத்த முடியாதவர்களுக்குப் பிறப்பைக் கட்டுப்படுத்து வதற்கு உரிமை இல்லை. பிறப்பைக் கட்டுப்படுத்தினால் விளையப்போவது மகத்தான அழிவுதான்.

13. பிறப்பு–இறப்பு என்ற செயல் திட்டம் (மக்கள்தொகைக் கட்டுப்பாடு) மனிதனுடைய கையில் இல்லை. உற்பத்தி என்னும் வேலையைச் செய்கிற ஈசுவரன் மற்றும் பிரகிருதியின் கையில் இருக்கிறது. ஈசுவரன்–பிரகிருதியின் ஆணைப்படி,

அனாதி காலத்திலிருந்தே, மக்கள்தொகைக் கட்டுப்பாடு என்பது இயல்பாகவே நடந்து வந்திருக்கிறது. மனிதன், அவர்களுடைய ஆணையில் குறுக்கீடு செய்தால், விளைவுகள் மிகவும் பயங்கரமானவையாக இருக்கும்.

14. நாய், பூனை, பன்றி முதலியன ஒவ்வொரு தடவையும் பல குட்டிகள் போடுகின்றன. அவை தம் இனப்பெருக்கத்தைத் தடுப்பதற்காகக் கட்டுப்பாடு ஏதும் செயல்படுத்துவதில்லை. அப்படியிருந்தும், எல்லாச் சந்துகளிலும் சாலைகளிலும் அவைகளே நிறைந்து பரவியிருப்பதாகத் தெரியவில்லை. அவற்றினுடைய தொகை எந்தச் சக்தியினால் ஒரு வரையறைக்குள் வைக்கப்பட்டிருக்கிறதோ, அதே சக்தியினால் மக்கள்தொகையும் கட்டுப்படுத்தப்படும். இந்தப் பொறுப்பு மனிதனிடம் இல்லவே இல்லை.

15. ஆண்மை என்பது, கருப்பையில் கருவை நிலைகொள்ளச் செய்யும் ஆற்றல். பெண்மை என்பது, விதைக்கப்பட்ட கருவை ஏற்று வளர்க்கும் ஆற்றல். ஆண்களிடம் ஆண்மை இல்லை; பெண்களிடம் பெண்மை இல்லை என்றால், அவர்கள் வெறும் புலனின்பம் அனுபவிக்கும் விலங்குகளாகிறார்கள். அவர்கள் மனிதர்கள் அல்லர்; மனிதத் தன்மை உடையவர்களும் அல்லர்.

16. மரணம் என்பது எல்லோருக்கும் நிச்சயமாக நிகழக்கூடியது என்று தெரிந்திருந்தும் கூட, இனப்பெருக்கத் தடைக்கான வழிமுறைகளை ஏற்பது எவ்வளவு அறியாமை! இப்போதுள்ள ஓரிரு குழந்தைகளும் இறக்க நேர்ந்தால் நிலைமை என்னவாகும்?

17. மனித குலத்தில், இந்துக்கள்தான் மிகவும் உயர்ந்தவர்கள். மிக மேன்மையான ரிஷி–முனிவர்கள், சாது–மகாத்மாக்கள், தத்துவதரிசிகள், விஞ்ஞானிகள் மற்றும் சிந்தனையாளர்கள் ஆகியோர் இந்து ஜாதியில் தோன்றி வந்திருக்கிறார்கள். இந்த ஜாதியில் மனிதர்களைப் பிறக்கவே

விடாமல் செய்துவிட்டால், இப்படிப்பட்ட மேலான, சீரிய மனிதர்கள் எங்கே பிறப்பார்கள்? எப்படிப் பிறப்பார்கள்?

18. இன்றைய மக்களாட்சி முறைக்கும் மக்கள் தொகைக்கும் நேரிடையான சம்பந்தம் இருக்கிறது. அதனால், மக்கள்தொகையை அதிகம் பெற்ற இனம் (அதிக வாக்குகளைப் பெற்று) வலிமை அடைந்து, நாட்டின் ஆட்சியைக் கைப்பற்றும். எந்த இனம், குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தை ஏற்றுக் கொள்கிறதோ, அந்த இனம் முடிவில் தன்னைத்தானே இழந்துவிடுகிறது. இன்றைய நிலையில், குடும்பக் கட்டுப்பாட்டு மற்றும் மதமாற்றம் காரணமாக, இந்துக்களின் தொகை மிக வேகமாகக் குறைந்து போய்க் கொண்டிருக்கிறது. ஆக, இனி யாருடைய ஆட்சி நடக்கும்? நம்முடைய நிலை எவ்வளவு பரிதாபத்திற்குரியதாகும்? சற்றே சிந்தித்துப் பாருங்கள்!

19. மக்கட்பேற்றைத் தவிர்க்கும் செயற்கை முறைகளின் பிரசாரத்தாலும், ஒளிபரப்பினாலும், சமுதாயத்தில் விபசாரம், கேளிக்கை நாட்டம் போன்ற சமூகவியல் குற்றங்கள் அதிகரித்து வருவதைக் கண்கூடாகக் காண்கிறோம். கன்னிப்பெண்களும், கணவனை இழந்தோரும் சூல் கொள்கிறார்கள். மக்களிடையே நல்லொழுக்கம், நன்னெறி, புலனடக்கம், வெட்கம், பிரம்மசரியம் முதலிய நற்பண்புகள் குறைந்து போய்க் கொண்டிருக்கின்றன. அதனால், எந்த நோக்கில் பார்த்தாலும், நாடு வீழ்ச்சி அடைந்து கொண்டிருக்கிறது என்பது தெளிவாகத் தெரிகிறது.

20. மக்கட்பேற்றுத் தடைகளை ஏற்றுக் கொள்வதன் மூலம், ஒரு மங்கையின் அன்னை வடிவத்தை அழித்துவிட்டு, அவளை ஓர் இன்பக் கருவியாகவே ஆக்கும் நிலை ஏற்படுகிறது. புலன் வேட்கையைத் தீர்க்கும் பெண், வெறும் விலைமாது ஆகிவிடுகிறாள். இது பெண் குலத்திற்கே இழைக்கப்படும் பெரும் அவமானம் அல்லவா?

21. இனப்பெருக்கத் தடையை அனுசரிப்பதன் அடித்தளத்தில், சுகபோகங்களை அனுபவிக்க வேண்டும் என்ற விருப்பம் மட்டுமே இருக்கிறது. தன்னுடைய குழந்தையைத் தனக்குப் பிடிக்காமல் போய் விடுகிறது என்னும்போது, தன் தாய்—தந்தை, சகோதரன்—சகோதரிகள் எம்மாத்திரம்?

22. குழந்தை வேண்டாம் என்றால், புலன்களைத் தன்வசத்தில் வைத்திருக்க வேண்டும். புலனடக்கத்தால் உடல் ஆரோக்கியம் வளம் பெறுகிறது; ஆயுள் கூடுகிறது; உடல் நலமும், ஆன்மிக வளர்ச்சியும் பெருகுகின்றன. 'ஏர் பூட்டி உழுவேன்; ஆனால், விதை விதைக்க மாட்டேன்.' இது என்ன புத்திசாலித்தனமோ!

23. குழந்தைப் பேற்றைத் தடுக்கும் எண்ணம் வேரூன்றிவிட்டால், மனிதன் எவ்வளவு கொடுமையாக, இரக்கமற்றவனாக, துன்புறுத்துபவனாக மாறிவிடுகிறான்? கருப்பையில் உள்ள தன்னுடைய குழந்தையைக் கொல்வதற்குக் கூட அவன் தயங்குவதில்லை. கருக்கலைப்பு என்பது பிரம்மஹத்தியை விட இரு மடங்கு பாவகரமானது!

24. கருக்கலைப்புக்கு நிகரான கோரமான பாவம் வேறு எதுவுமேயில்லை. உலகிலுள்ள எந்தவொரு உயர்ந்த மதமும், இப்பெரும் பாவத்தை ஆதரிக்கவில்லை; ஆதரிக்கவும் முடியாது. ஏனெனில், இந்தக் காரியம் மனிதத்தன்மைக்கு விரோதமானது. கொடுமை நிறைந்த, துன்புறுத்தும் இயல்புடைய விலங்குகள்கூட இந்தக் காரியத்தைச் செய்வதில்லை.

25. கருப்பையிலுள்ள சின்னஞ்சிறு குழந்தை, தன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்காக, எந்தவோர் உபாயத்தையும் செய்யமுடியாது; எதிர் நடவடிக்கையும் எடுக்க முடியாது; தன்னைக் காப்பாற்றும்படி குரல் கொடுக்க முடியாது; கூச்சல் போட முடியாது. அது எந்தவொருக் குற்றமோ, தவறோ செய்யவில்லை. இத்தகைய சூழ்நிலையில், வலிமையற்ற,

உதவியற்ற, குற்றம்–குறைகளற்ற, ஊமையான சிசுவைக் கொன்றுவிடுவது, எவ்வளவு பெரிய பாவம்!

26. 'தானே நட்டு வளர்த்த விஷ மரத்தைத்கூடத் தானே வெட்டி வீழ்த்தக்கூடாது' என்று ஒரு பழமொழி உண்டு. ஆணும் பெண்ணும் சேர்ந்து உண்டாக்கும் கருவைத் தாங்களே மாய்த்து அழிப்பது என்பது மிக இழிவான, நன்றி கொல்லும் செயல் அல்லவா? தவறு செய்வது (புலனடக்கமின்மை) அவர்கள். ஆனால், தவறு செய்யாத கருவை அழிக்கிறார்கள். இது எவ்வளவு பெரிய அநியாயம்!

27. கருவில் புகுந்துள்ள ஜீவன், எவ்வளவு நல்ல உலகியல் மற்றும் ஆன்மவியல் செயல்களைச் செய்யவிருந்ததோ? சமுதாயத்துக்கும் நாட்டுக்கும் எவ்வளவு பணி செய்ய விருந்ததோ? எத்தனையோ மக்களுக்கு உதவி செய்தல், சாது–மகாத்மாவாகி ஏராளமான மக்களுக்கு ஆன்மநெறியைக் காட்டுதல், பலப்பல கண்டுபிடிப்புகளைச் செய்தல் – இப்படி என்னவெல்லாம் செய்யவிருந்ததோ? எனவே, பிறவி எடுப்பதற்கு முன்பாகவே, அதனை அழித்துவிடுவது என்பது எவ்வளவு பெரிய பாவம்! எவ்வளவு பெரிய குற்றம்!

28. உயிர் வாழ்வதற்கான உரிமை ஒவ்வொரு ஜீவனுக்கும் இருக்கிறது. அதனைக் கரு நிலையிலேயே அழித்து, அதன் உரிமையைப் பறிப்பது மிகப்பெரிய பாவம்.

29. ஒரு மனிதனைக் கொல்வது மிகப்பெரிய பாவமாகக் கருதப்படுகிறது. ஆனால், அந்தக் குற்றத்தைச் செய்கிற மனிதனுக்குக்கூடத் தூக்குத்தண்டனை கொடுக்காமல், ஆயுள் தண்டனை கொடுக்கிறார்கள். இந்தக் கருக்கலைப்பு மட்டுமென்ன? குற்றமற்ற ஒரு மனிதனைக் கொலை செய்வது போன்றதுதானே!

30. கர்ப்பத்தில் வந்துள்ள ஜீவனுக்கு முற்பிறவிகளைப் பற்றிய நினைவு ஏற்படுகிறது. அதனால்தான், ஸ்ரீமத் பாகவதம்,

அதனை 'ரிஷி' (ஞானி) என்று பெயரிட்டுக் கூறுகிறது. ஆகவே, கருக்கலைப்புச் செய்வதால், ஒரு ரிஷியைக் கொலை செய்வதாகிறது. இதைக் காட்டிலும் வேறென்ன பெரிய பாவம் இருக்க முடியும்?

31. மக்கள் மருத்துவப் பரிசோதனை மூலம், கருவில் இருப்பது ஆணா, பெண்ணா என்று தெரிந்து கொண்டு, அது பெண்ணானால் கருக்கலைப்புச் செய்து கொள்கிறார்கள். இதுதான் பெண் இனத்திற்கு சம உரிமை அளிக்கும் அழகா? இதுதான் பெண் இனத்தைப் பாராட்டும் முறையா?

32. குடும்ப வாழ்க்கை நடத்தும் மக்களுடைய பார்வையில், எது மிக உயர்ந்த சுகமாகக் கருதப்படுகிறதோ, எந்தச் சுகத்தை அனுபவிக்காமல் ஒரு போகி இருக்க முடியாதோ, அந்தச் சுகத்தை அளிக்கும் கருவை அழிப்பது என்பது எவ்வளவு பெரிய பாவம்? செய்நன்றி மறப்பது, துஷ்டத்தனம், வெறுப்பன செய்வது, கொடுமை, மனிதத் தன்மைக்கு அப்பாற்பட்டது, அநீதி ஆகியவற்றின் இறுதி எல்லையே இந்தப் பாவ காரியம்! அதாவது, இதனினும் பெரிய குற்றம் என்று வேறெதுவும் இல்லை!

33. 'பெறற்கரியது' என்று மனிதப் பிறவியைச் சொல்கிறார்கள். அத்தகைய மனித உடலைப் பெற்றுள்ள ஜீவன், தனக்கும் பிறருக்கும் ஆன்மிக மேம்பாட்டைச் செய்ய இயலும். அந்த ஜீவனுக்கு இப்படிப்பட்ட கிடைத்தற்கரிய வாய்ப்பினைக் கெடுப்பது (தடுப்பது), குழந்தைப் பேறு ஏற்படாத வழிமுறைகளைக் கைக்கொள்வது அல்லது பிறப்பதற்கு முன்னதாகக் கருக்கலைப்புச் செய்து, அதனை அழித்து விடுவது என்பது எவ்வளவு பெரிய பாவம்!

34. தங்கள் குழந்தைகளை மிக்க பரிவோடு பேணிப் பாதுகாக்கும் கடமையுடைய பெற்றோர்களே, கருவில் இடம் கொண்டுள்ள குழந்தையை அழிக்க முயல்கிறார்கள் என்றால், வேறு எவரிடமிருந்து அக்குழந்தை பாதுகாப்புப் பெற முடியும்?



|| ஸ்ரீஹரி: ||

# 2. மிகக்கொடிய பாவம் கருக்கலைப்பு

குடும்ப வாழ்க்கை நடத்தும் மக்களுடைய பார்வையில் எது மிக உயர்ந்த இன்பமாகக் கருதப்படுகிறதோ, எந்தச் சுகத்தை அனுபவிக்காமல் ஒரு போகி இருக்க முடியாதோ, எந்தச் சுகத்தை அவன் தியாகம் செய்ய முடியாதோ, அந்தச் சுகத்தை அளிக்கும் கருவை, அவன் (செயற்கை முறையிலான கருக்கலைப்பு மூலம்) அழித்துவிடுகிறான்! இதைக் காட்டிலும் கொடிய பாவம் வேறு என்ன இருக்க முடியும்? இந்தக் கொடுமை பாவத்தின், தீமையின், அநீதியின் உச்சக்கட்டம் ஆகும். செய்ந்நன்றி மறத்தலின் பாற்படும். ('உய்வில்லை செய்நன்றி கொன்ற மகற்கு.')

மனித உடல் கிடைத்தற்கரியது என்பதால், அதை அடைவதற்கு அசைவன—அசையாதனவாகிய எல்லாப் பிராணிகளும் விரும்புகின்றன.

*நர தந ஸம நஹி(ம்) கவநிஉ தே$_3$ஹீ ।*
*ஜீவ சராசர ஜாசத தேஹீ ॥*
***(ஸ்ரீராமசரிதமாநஸம், உத்தர காண்டம் 121/5)***

ஒரு மனிதனைக் கொல்வது மிகப்பெரிய பாவமாகக் கருதப்படுகிறது. ஆனால், அந்தக் குற்றத்தைச் செய்யும் மனிதனுக்குக் கூடத் தூக்குத் தண்டனை கொடுக்காமல் ஆயுள் தண்டனைதான் கொடுக்கிறார்கள். இந்தக் கருக்கலைப்பு என்பது என்ன? குற்றமற்ற ஒரு மனிதனைக் கொலை செய்வதுதானே? மனிதனுடைய அறிவு எவ்வளவு தரம் தாழ்ந்துவிட்டது, பாருங்கள்! 'மண்டைக்குள் நாய் புகுந்து விட்டது!' என்று ஒரு வடகத்திய பழமொழி உண்டு. தன்னுடைய ஆன்மிக மேன்மையை விரும்பும் எந்த மனிதனும் இத்தகைய வெறுக்கத்தக்க பாவத்தைச் செய்யவே மாட்டான்.

எந்த ஒரு மதத்தலைவரும் இந்தப் பாவத்தை அங்கீகரிக்க மாட்டார்.

கருக்கலைப்பைக் காட்டிலும் பெரிய பாவம் இல்லை; பெரிய இம்சை இல்லை; கொடுஞ்செயல் இல்லை; நன்றி கொல்லும் செயல் இல்லை; பெரிய அநியாயம் இல்லை; ஒழுக்கக்கேடு இல்லை; அரக்கத்தனம் இல்லை! இந்த அளவுக்கு வெறுக்கத்தக்க பாவம் வேறு எதுவுமே இல்லை என்னும்போது, இதைக் காட்டிலும் பெரிய பாவமே கிடையாது என்பதைச் சொல்லவும் வேண்டுமா? இதைக் காட்டிலும் கொடிய பாவம் இருக்கவும் முடியாது. நம்மால் ஆக்க முடியாததை அழிப்பதற்கு, நமக்கு எவ்வித உரிமையும் இல்லை.

காமவேட்கைதான் எல்லாப் பாவங்களுக்கும் ஆணிவேர். ஒரு மரத்தின் ஒரு விதைக்குள் விரிந்து பரந்த காடு நிறைந்திருப்பதைப்போல, காமவேட்கையில் எல்லாப் பாவங்களும் துன்பங்களும் நிறைந்துள்ளன. ஆகவே, எவர் குழந்தை பெறவேண்டும் என்ற எண்ணமில்லாமல், தன் காமவேட்கையைத் தணித்துக் கொள்வதற்காகவே மனைவியுடன் உறவு கொள்கிறானோ, இது முதலாவது பெரும் பாவம். அடுத்ததாக, பெண்ணின் கர்ப்பத்தில் கரு உருப்பெற்றதும், அதனை அழித்துவிடுகிறானோ, இது 'கருக்கொலை' என்ற மற்றொரு மகாபாவம்!

'தானே விதை விதைத்து வளர்த்த விஷ மரத்தைக் கூடத் தானே வெட்டி வீழ்த்தக் கூடாது' என்று ஒரு பழமொழி உண்டு. சான்றோர் மொழி அவ்விதம் இருக்கையில், தங்களாலேயே உற்பத்தி செய்யப்பட்ட, குற்றம் ஏதும் செய்யாத கருவைத் தாங்களே அழித்துவிடுவது என்பது, எவ்வளவு பயங்கரமான பாவம்! இத்தகைய பாவத்திற்காக மிகவும் பயங்கரமான பலன்களை அனுபவிக்கத்தான் நேரிடும். இதிலிருந்து யாரும் தப்ப முடியாது.

*'அவஶ்யமேவ போ₄க்தவ்யம்*
*க்ருதம் கர்ம ஶுபா₄ஶுப₄ம் ।'*

இதை நினைவில் வைத்துக்கொள்ளுங்கள்: மற்றவர்களுடைய சுகத்திற்காக, நாம் அனுபவிக்கும் துன்பங்கள், முடிவில் மகத்தான மகிழ்ச்சியளிப்பவை ஆகின்றன. ஆனால், தன்னுடைய இன்பத்திற்காகப் பிறருக்கு இழைக்கப்பட்ட துன்பங்கள், முடிவில், பயங்கரமான துயரத்தைத் தருபவையாகின்றன. நீங்கள் விழைவது பேரின்பமா, பெருந்துயரா? என்பதை இப்போது நீங்களே தீர்மானித்துக் கொள்ளுங்கள்!

கருப்பையில் இடம் பெற்ற ஜீவனுக்கு முற்பிறவிகளைப் பற்றிய நினைவு ஏற்படுகிறது.† அதனால்தான் கருப்பையில் உள்ள ஜீவன், 'ருஷி' (ஞானி) என்று ஸ்ரீமத் பாகவதத்தில் கூறப்பட்டிருக்கிறது—

***'நாத₂மாந ருஷிர்பீ₄த:'*** ***(3/31/11)***
***'ஏவம் க்ருதமதிர்க₃ர்பே₄***
***த₃ஶமாஸ்ய: ஸ்துவந்ந்ருஷி: ।' (3/31/22)***

கருக்கலைப்புச் செய்வது ஒரு ரிஷியைக் கொன்றதாகும். இதைவிடப் பெரிய பாவம் இருக்க முடியுமா? சாஸ்திரங்களில் இது போன்ற மிகக்கொடிய இன்னொரு பாவம் நமக்குப் புலப்படவில்லை. இவ்வித பயங்கரமான மகாபாவத்தைச்

---

† ***(1)*** ***அத₂ நவமே மாஸி ஸர்வலக்ஷண-***
***ஸம்பூர்ணோ ப₄வதி பூர்வஜாதீ: ।***
***ஸ்மரதி க்ருதாக்ருதம் ச கர்ம ப₄வதி***
***ஶுபா₄ஶுப₄ம் ச கர்ம விந்த₃தி ॥***
***(கர்போபநிஷத் 3)***

***(2)*** ***அகல்ப: ஸ்வாங்க₃சேஷ்டாயாம்***
***ஶகுந்த இவ பஞ்ஜரே ।***
***தத்ர லப்₃த₄ஸ்ம்ருதிர்தை₃வாத்-***
***கர்ம ஜந்மஶதோத்₃ப₄வம் ॥***
***(ஸ்ரீமத் பாகவதம் 3/31/9)***

செய்கிறவர்களுக்கு என்ன கதி ஏற்படுமோ, ஆண்டவனுக்குத்தான் தெரியும்!

## கருப்பையில் உள்ள சிசுவைச் சிதைப்பது (கண்ணால் கண்ட சாட்சிகள்)

'நேஷனல் ரைட்ஸ் டு லைப் கன்வென்ஷன்' (உயிர் வாழ்வதற்கான தேசிய உரிமைகள் மாநாடு) என்ற பெயரில், 1984–ம் ஆண்டில், அமெரிக்காவில் ஒரு மாநாடு நடைபெற்றது. அப்போது, டாக்டர் பர்னார்டு நெதன்ஸன் என்ற பிரதிநிதி, அதிநுட்ப ஒலிப்பதிவுடன் கூடிய, **'Silent Scream'** (சப்தமற்ற அழுகுரல்) என்ற கருக்கலைப்புப் பற்றிய திரைப்படத்தைக் காட்டினார். அதன் முழு விவரம் கீழே காண்போம்.

கருப்பையிலிருந்த அந்த சிசுப் பிண்டம் பத்து வார கால வளர்ச்சியுடன் காணப்பட்டது. அது தன் தாயின் வயிற்றுக்குள் விளையாடுவதையும், பக்கம் மாறிக் கொள்வதையும், விரல் சூப்புவதையும் நாங்கள் பார்த்துக் கொண்டிருந்தோம். அதனுடைய இதயத் துடிப்பையும் எங்களால் காண முடிந்தது. அது, அந்த நேரத்தில், பொதுவாக 120 தடவை துடிப்புடன் செயல்பட்டுக் கொண்டிருந்தது. எல்லாமே சீராகத்தான் இருந்தது.

ஆனால், முதல் தடவை உறிஞ்சு குழாய் (ஸக்ஷன் பம்ப்) கருப்பையின் மேற்புறத்தைத் தீண்டியவுடன், அந்த சிசுப் பிண்டம், ஒருமுறை சுழன்றுவிட்டுக் குறுகிக் கொண்டது. அதன் இதயத் துடிப்பும் வெகுவாக ஏறிவிட்டது. இதுவரை, அந்தச் சிசுவை ஒருபொருளும் தொட்டது கூட இல்லை என்றாலும், அதனுடைய ஓய்வறையை, அதனுடைய பாதுகாப்பான இருப்பிடத்தை ஏதோ ஒன்று முற்றுகையிடுவதற்கு முயன்று கொண்டிருக்கிறது என்ற உணர்வு அதற்கு ஏற்பட்டிருந்தது.

அந்த உறிஞ்சு குழாய் எவ்வாறு அந்தச் சின்னஞ்சிறு சிசுவான சதைப்பிண்டத்தைத் துகள் துகளாக்கிக் கொண்டிருந்தது

என்பதைத் திகில் நிறைந்த நெஞ்சத்துடன் நாங்கள் பார்த்துக் கொண்டிருந்தோம். அது உயிர்த்துடிப்புடைய பிராணியே அன்று, வெறும் மரக்கட்டை என்பது போல, முதலில் இடுப்பு, அடுத்து கால் முதலியன துண்டிக்கப்பட்டன. அந்தச் சிசு வலியினால் துடித்துக் குறுகிச் சுற்றிச் சுழன்று, கொலைக் கருவியான குழாயிலிருந்து தப்பித்துக் கொள்வதற்கான முயற்சியைச் செய்து கொண்டிருந்தது. அது மிகவும் பயந்து போயிருந்தது என்பதை, ஒரு சமயம் அதன் இதயத் துடிப்பு 200 வரை உயர்ந்துவிட்டதிலிருந்து அறிந்து கொள்ள முடிந்தது. அது தன் தலையைப் பின்னுக்கு இழுத்துக் கொள்வதையும், வாயைத் திறந்து அலற முயன்று கொண்டிருப்பதையும், நான் என் கண்களாலேயே பார்த்தேன். (இந்தக் காட்சியைத்தான் 'சப்தமற்ற அழுகுரல்' என்ற சரியான தலைப்புக் கொடுத்து டாக்டர் நெதன்ஸன் விளக்கியிருக்கிறார்.)

கடைசியாக, நாங்கள் கொடூரமான, வெறுக்கத்தக்க ஒரு காட்சியையும் பார்த்தோம். அந்தச் சிசுவின் மண்டையோட்டைப் பிளப்பதற்காக, சிறு கிடுக்கி போன்ற ஆயுதம் சரியான இடத்தைத் தேடியது. பின், அதனை அமுக்கிப் பிளந்தது. ஏனென்றால், தலையின் அந்தப் பகுதியை உடைக்காமல், உறிஞ்சு குழாய் மூலம் அதனை வெளியே கொண்டுவர முடியாது!

உயிர்க்கொலையின் வெறுக்கத்தக்க இந்த விளையாட்டை ஆடித்தீர்ப்பதற்கு ஏறக்குறைய பதினைந்து நிமிடம் ஆயிற்று. இந்தக் கருக்கலைப்பைச் செய்ததோடு, ஆர்வம் காரணமாக அந்தக் காட்சிகளைப் படம் பிடிக்க ஏற்பாடு செய்திருந்த டாக்டர், தாமே அந்தப் படச்சுருளைத் திரையிட்டுப் பார்த்த பின், மருத்துவமனையை விட்டுவிட்டு வெளியேறிப் போனவர், திரும்பி வரவேயில்லையாம்! இதிலிருந்தே அந்தக் காட்சியின் படுகோரத்தை நாம் அனுமானிக்கலாம் அல்லவா?

## கருக்கலைப்புப் பற்றி அறநூல்கள் கூறுவன

***யத்பாபம் ப்$_3$ரஹ்மஹத்யாயா***
***த்$_3$விகு$_3$ணம் க$_3$ர்ப$_4$பாதநே ।***
***ப்ராயஶ்சித்தம் ந தஸ்யாஸ்தி***
***தஸ்யாஸ்த்யாகோ$_3$ விதீ$_4$யதே ॥***

***(பராஶரஸ்ம்ருதி 4/20)***

"ஒரு வேதியரைக் கொன்றால் ஏற்படும் பாவத்தைப்போல் இரு மடங்கு பாவம், கருக்கலைப்பினால் ஏற்படுகிறது. கருக்கலைப்பு என்ற மகாபாவத்துக்கு எவ்விதப் பிராயச்சித்தமும் கிடையாது. இந்த விஷயத்தில் (கருக்கலைப்புக்கு இணங்கிய) அந்தப் பெண்ணைக் கைவிட்டுவிடும்படிதான் சட்டம் கூறுகிறது."

***ப்$_4$ரூணக்$_4$நாவேக்ஷிதம் சைவ***
***ஸம்ஸ்ப்ருஷ்டம் சாப்யுத$_3$க்யயா ।***
***பதத்ரிணாऽவலீட$_4$ம் ச ஶுநா***
***ஸம்ஸ்ப்ருஷ்டமேவ ச ॥***

***(மனுஸ்ம்ருதி 4/208)***

"கருக்கலைப்பு செய்து கொண்டவளால் பார்க்கப்பட்ட, மாதவிலக்கிலுள்ள பெண்ணால் தொடப்பட்ட, பறவையினால் எச்சில்படுத்தப்பட்ட, நாயினால் வாய் வைக்கப்பட்ட உணவு உண்ணத்தக்கதன்று."

கருக்கலைப்பு செய்து கொள்பவர்களுக்கு, அடுத்து வரும் பிறவிகளில் குழந்தைப்பேறு உண்டாகாது. இதைப் பற்றித் தெளிவுபடக் கூறும் பல சுலோகங்கள் ***'வ்ருத்$_3$த$_4$-ஶௌர்யாருணகர்மவிபாகம்'*** என்ற நூலில் காணப்படுகின்றன. அவற்றில் சில—

***பூர்வே ஜநுஷி யா நாரீ க$_3$ர்ப$_4$கா$_4$தகரீ ஹ்யபூ$_4$த் ।***
***க$_2$ர்ப$_4$பாதேந து$_3$:கா$_2$ர்தா ஸாऽத்ர ஜந்மநி ஜாயதே ॥***

***(477/1)***

''முன் ஜன்மத்தில், எந்தப் பெண் கருக்கலைப்புச் செய்தாளோ, அவள் இந்தப் பிறவியிலும் கருக்கலைப்பின் துக்கத்தை அனுபவிக்கிறாள். அதாவது, அவளுக்கு மக்கட்பேற்றுக்கான வாய்ப்பே இல்லை.''

*வந்த்$_4$யேயம் யா மஹாப$_4$ாக$_3$*
*ப்ருச்ச$_2$தி ஸ்வம் ப்ரயோஜநம் ।*
*க$_3$ர்ப$_4$பாதரதா பூர்வே*
*ஜநுஷ்யத்ர ப$_2$லம் த்வித$_3$ம் ॥*

***(659/1, 856/1, 921/1, 1857/1)***

''இந்தப் பிறவியில் நான் ஏன் மலடியாக இருக்கிறேன்? என்று ஒரு பெண் கேட்டால், அதற்குப் பதில், 'முற்பிறவிகளில் நீ செய்து கொண்ட கருக்கலைப்பின் பயன்தான், இது!' என்பதுவே.''

*க$_3$ர்ப$_4$பாதநபாபாட்$_4$யா*
*ப$_3$பூ$_4$வ ப்ராக்$_3$ப$_4$வேऽண்ட$_3$ஜ ।*
*ஸாऽத்ரைவ தேந பாபேந*
*க$_3$ர்ப$_4$ஸ்தை$_2$ர்யம் ந வித$_3$ந்தி ॥*

***(1187/1)***

''அருணனே! எந்தப் பெண், முற்பிறவியில் கருக்கலைப்புச் செய்து கொண்டாளோ, அவளுக்கு இந்தப் பிறவியில், அந்தப் பாவத்தின் காரணமாக, கரு நிலைகொள்வதில்லை. அதாவது, அவள் குழந்தைப் பேறற்றவளாக ஆகிறாள்.''



॥ ஸ்ரீஹரி: ॥

# 3. மேன்மைமிக்க இந்து தர்மமும், அதன் தேய்வுக்குக் காரணமும்

உலகில், முக்கியமாக நான்கு சமயங்கள் நிலவி வருகின்றன. அவையாவன— இந்து சமயம் (ஸநாதன தர்மம்), முஸ்லீம் சமயம், பௌத்த மதம் மற்றும் இயேசு மதம். இவற்றில் ஒவ்வொரு சமயத்தைச் சார்ந்தவர்களும் கோடிக்கணக்கில் இருக்கிறார்கள். இந்நான்கின் உட்பிரிவுகளாகப் பல மதங்கள் இருக்கின்றன. இந்து தர்மத்தைத் தவிர, மற்ற மூன்று தர்மங்களையும் 'துவக்கி வைத்தவர்' என்று தனித்தனி நபர்கள் இருக்கின்றனர். முஸ்லீம் தர்மத்தின் துவக்கத்தில், முகம்மது நபி; பௌத்த தர்மத்தின் துவக்கத்தில், கௌதம புத்தர்; கிறிஸ்தவ தர்மத்தின் துவக்கத்தில், ஏசுபிரான் என்று இப்படி.

ஆனால், இந்து தர்மத்தின் துவக்கத்தில், அதைத் துவக்கி வைத்தவர் என்று எவரும் கிடையாது. ஏனெனில், இந்து தர்மம் என்பது யாரோ ஒரு மனிதரால் ஆரம்பித்து வைக்கப்பட்ட தர்மம் அன்று. மாறாக, அனாதிகாலமாக அது இருந்துகொண்டு வந்திருக்கிறது. எப்படி பகவான் ஸநாதனரோ, அப்படியே இந்து தர்மமும் ஸநாதனமானது. அதனால்தான், இந்து தர்மத்தை, 'ஸநாதன தர்மம்' என்றும், 'தம்முடைய ஸ்வரூபம்' என்றும் பகவானும் கூறியிருக்கிறார் (கீதை 14/27).

எந்தெந்தக் காலக் கட்டங்களில் இந்த ஸநாதன தர்மத்திற்குக் குறைவு ஏற்படுகிறதோ, ஊறு விளைகிறதோ, அந்தந்தக் காலங்களில் பகவான் அவதாரம் செய்து, இதனை நிலைநிறுத்துகிறார். பகவான் இதனை (ஸநாதன தர்மத்தை) உறுதியாக நிலைநிறுத்துவதற்காக (காப்பாற்றுவதற்காக)த் தான் அவதாரம் செய்தாரே தவிர, இதனைப் புதிதாகத் தொடங்குவதற்காக அன்று என்பதை உணர வேண்டும். பகவான், ஸநாதன தர்மத்தின் காவலர் என்று, அர்ஜுனனும்

கூறியிருக்கிறார்— *'த்வமவ்யய: ஶாஶ்வதத₄ர்மகோ₃ப்தா'* *(கீதை 11/18)*.

உண்டாக்குதல், கண்டுபிடித்தல் என்று இருவகைகள் உள்ளன. எந்தப் பொருள் முன்பு இல்லையோ, அது உண்டாக்கப்படுகிறது. எந்தப் பொருள் முன்பே இருந்து வருகிறதோ, அது கண்டுபிடிக்கப்படுகிறது. இஸ்லாம், பௌத்தம், கிறிஸ்தவம் ஆகிய மூன்றும் மனிதனுடைய சிந்தனையில் தோன்றியவை. ஆனால், ஸநாதனமான இந்து தர்மமோ எந்த ஒரு நபரின் மூளையிலிருந்தும் உற்பத்தியாகவில்லை. மாறாக, பற்பல முனிவர்களாலும் கண்டுபிடிக்கப்பட்டதாகும் – **'ருஷயோ மந்த்ரத்₃ரஷ்டார: ।'** அதனால், இந்து தர்மத்திற்கு அடித்தளம் அமைத்துக் கொடுத்தவர் என்று, எந்த ஒரு தனி நபரின் பெயரையும் கூற முடியாது.

இது, ஆரம்பம் இல்லாதது, எல்லையற்றது, நிரந்தரமானது. மற்ற எல்லா தர்மங்களும், ஆன்மிக கோட்பாடுகளும் இந்த இந்து தர்மத்திலிருந்தே தோன்றியிருக்கின்றன. ஆதலால், அந்த மதங்களில், மனித நல்வாழ்வுக்கான சாதனங்கள் என்று சொல்லப்பட்டவையும் கூட, இந்து தர்மத்திலிருந்து எடுத்துக் கொள்ளப்பட்டவை என்றே கொள்ள வேண்டும். எனவே, அந்த மதங்களில் கூறப்பட்டுள்ள சமயச் சடங்குகளையும், நிஷ்காம பாவனையுடன், கடமை என்ற எண்ணத்துடன் செய்து வந்தால், ஆன்மிக மேன்மை ஏற்படும் என்பதில் ஐயம் கொள்ளத் தேவையில்லை.†

---

† ஒவ்வொரு மதத்திலும் குதர்மம், அதர்மம், பரதர்மம் என்று மூவகை உள்ளன. பிறருக்குத் துன்பம் அளித்தல், வஞ்சகம் ஆகியவை குதர்மம்; வேள்விகளில் பசுக்களைப் பலி கொடுப்பது முதலியவை அதர்மம்; தன் வருணத்திற்கு விதிக்கப்படாததும், பிற வருணத்திற்கு தர்மம் எனவும் உள்ளவை பரதர்மம். குதர்மம், அதர்மம், பரதர்மம் ஆகிய மூன்றினாலும் நன்மை ஏற்படாது. தன்னலமும் செருக்கும் இல்லாமல் தியாக உணர்வுடன், தனக்கும் பிறருக்கும், நிகழ்காலத்திலும் எதிர்காலத்திலும் நலம் பயப்பதுதான் 'தர்மம்' எனப்படுகிறது.

உயிர்களின் மேன்மை குறித்து, இந்து தர்மத்தில் எவ்வளவு ஆழமாகச் சிந்திக்கப்பட்டிருக்கிறதோ, அந்த அளவுக்குப் பிற மதங்களில் காணப்படவில்லை. இந்து தர்மத்தின் எல்லாக் கோட்பாடுகளும் அறிவியல் அடிப்படையில் அமைந்தவை; மேன்மை கொடுக்கக்கூடியவை என்பதால், இந்து தர்மம் எல்லாவற்றிலும் மேலானது என்பது நிரூபணமாகிறது.

இந்துக்களின் பெருக்கத்திற்கான தேவை என்ன?

முக்தி, தத்துவ ஞானம், ஆன்மிக மேன்மை, பரமசாந்தி மற்றும் பரமாத்மாவை அடைதல் ஆகியவை குறித்து, இந்து தர்மத்தில் மிக எளிமையாகக் கூறப்பட்டிருக்கின்றன. ஆனால், கிறிஸ்துவம், முஸ்லீம், பௌத்தம், யூதம், பார்சி ஆகிய எந்த ஒரு மதத்திலும் இவ்வளவு எளிதாக (எல்லோருக்கும் புரியும்படியாக)க் கூறப்பட்டிருப்பதாக, நாம் கேள்விப்படவே இல்லை. ஆகவேதான், இந்துக்களின் எண்ணிக்கை வளர வேண்டும் என்று நான் விரும்புகிறேன்.

ஏனெனில், இந்து தர்மத்தில் உள்ள, இவ்வுலகிலிருந்து வேறுபட்டதான, மிக உன்னதமான நூல்களில் கூறப்பட்டுள்ள வற்றை இந்துவைத் தவிர வேறு யார்தான் கேட்பார்கள்? போற்றுவார்கள்? முஸ்லீம்கள், எண்ணற்ற இந்து தர்ம நூல்களைத் தீயிட்டுக் கொளுத்தி அழித்தார்கள். அதனால்தான், வேத ஸம்ஹிதை இன்றைக்கு முழுமையாகக் கிடைக்கவில்லை; அறநூல்களும் முழுமையாகக் கிடைக்கவில்லை. இதனால், மிகச்சிறந்த எத்தனை எத்தனை கல்வித் துறைகள் நசித்துப் போயின! நுண்கலைகள் அழிந்தன! இவை மட்டும் இருந்திருந்தால், இந்துக்களுக்கு மட்டுமல்லாமல், உலகத்திற்கே நன்மை ஏற்பட்டிருக்கும்!

இன்றைய தினம், முஸ்லீம்களுடைய எண்ணிக்கை வளர்ந்து கொண்டும், இந்துக்களின் எண்ணிக்கை குறைந்து கொண்டும் இருப்பதால், நாளைய நிலைமை என்னவாகும்? இந்துக்களில்

யாரேனும் ஒருவர் இந்து தர்ம நூல்களைக் கற்றறிவர். ஆனால், இந்துக்களுடைய அறநூல்களைச் சுட்டெரித்து, குளிப்பதற்கு வெந்நீர் போட்டுக் கொண்டவர்களான அந்த முஸ்லீம்கள், இந்துக்களின் நூல்களைப் படித்துக் காப்பாற்றுவார்கள் என்று எப்படி நம்ப முடியும்? இந்துக்களை மதமாற்றம் செய்து முஸ்லீமாகவோ, கிறிஸ்தவராகவோ செய்பவர்கள், இந்துக்களின் தர்ம சாஸ்திரங்களைப் போற்றுவார்கள் என்று எப்படி எதிர்பார்க்க முடியும்? இது நடக்காது.

இந்த நோக்கில்தான், இந்துக்களின் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தை நான் எதிர்க்கிறேன். உண்மையில், இந்துக்களின் மக்கள்தொகை கூடவேண்டும். அதனால், அவர்களுக்கு ஆட்சிப் பொறுப்பு கிடைக்க வேண்டும் என்பது என் கருத்தன்று. மனிதனுக்கு விரைவாகவும் எளிதாகவும் ஆன்மிக முன்னேற்றம் ஏற்படவேண்டும் என்பதுதான் என் நோக்கம். நான், ஆன்மிக முன்னேற்றத்தில்தான் பெரிதும் ஆவல் உடையவன்; ஆட்சியில் அன்று.

என் மனத்தில், முஸ்லீம்களிடம் எள்ளளவுகூட வெறுப்பு இல்லை. ஆனால், அவர்கள் இந்துக்களை அழிக்க விரும்பும் செயல்தான் எனக்குச் சரியாகப்படவில்லை. என்மேல் விரோதமும் வெறுப்பும் உடைய ஒருவன் என்னை அணுகி, தன் ஆன்மிக முன்னேற்றத்திற்கு வழி கேட்டால், என்னிடம் மிகவும் நம்பிக்கையும் அன்பும் உடையவனுக்கு எவ்வாறு சொல்வேனோ, அதேபோலவே அவனுக்கும் கூறுவேன். ஒரு முஸ்லீம் என்னிடம் வந்து மனப்பூர்வமாகத் தன் ஆன்மிக மேன்மைக்கான வழியைக் கேட்டால், எல்லோருக்கும் முதலாவதாக, அவனுக்குத்தான் பதில் சொல்வேன், அப்புறம்தான் இந்துக்களுக்கு. எனக்கு எப்போதுமே யாரிடமும் பாகுபாடு இருந்ததேயில்லை.

ஜீவன், பரமாத்மாவின் அம்சமே. எனவே, எனக்கு எந்த உருவம் உண்டோ, அதுவேதான் முஸ்லீம்களுக்கும் இருக்கிறது.

எப்படி என் உருவம் பரமாத்மாவின் அம்சமோ, அப்படியே முஸ்லீம்களுடைய உருவமும் பரமாத்மாவின் அம்சம்தான். நான் அவர்களிடம் பகைமை பாராட்டினால், அது என்னுடைய உருவத்திடம், என் மனத்திற்குகந்த பொருளிடமே பகை கொள்வதாகும். ஏனெனில், பிற மத மரபுகளைக் குறை கூறுபவர்கள், உண்மையில் தமது சித்தாந்தங்களையே அவமதிப்பவர் ஆவார்கள்.

திருமால் அடியார் ஒருவர், சிவபெருமானை இகழ்ந்து பேசிவிட்டு, 'நான் திருமாலின் புகழ் பரப்பிக் கொண்டிருக்கிறேன்' என்றும், 'நான் திருமாலிடம் ஒன்றி நிற்கிறேன்' என்றும் நினைத்துக் கொள்வது போல்தான் இதுவும். ஆனால், பரமேசுவரனை நிந்திப்பதால், பரமேசுவரனிடமும், அவருடைய அடியார்களிடமும் திருமால் இல்லை என்றாகி விடுகிறது! ஆகவே, பிறருடைய இஷ்ட தெய்வத்தை அவமதிப்பவர்கள், உண்மையில் தங்களுக்கே தீங்கு தேடிக் கொள்கிறார்கள். தங்கள் இஷ்ட தெய்வத்தைப் பலவீனமாக்குகிறார்கள்.

**இதுபோலவே, நான் முஸ்லீம்களை நிந்தை செய்தால், அவர்களிடம் என்னுடைய பரமாத்மா இல்லை என்றாகிவிடும்! ஆதலால், முஸ்லீம்கள் என் வடிவினரே, ஆத்ம வடிவினரே, என்னிலிருந்து பிரிக்க முடியாதவரே. ஆனால் முஸ்லீம்கள், இந்துக்களைக் கொல்கிறார்கள்; இந்து பெண்டிரைத் தூக்கிச் செல்கிறார்கள்; அவர்களுடைய அறநூல்களைக் கொளுத்துகிறார்கள்; அவர்களுடைய கோவில்களைத் தகர்க்கிறார்கள்; அவர்களுடைய பசுக்களை வெட்டுகிறார்கள். இத்தகைய நாசகாரச் செயல்கள்தான் எனக்கு ஏற்புடையனவாக இல்லை.**

நாட்டில் முஸ்லீம்களின் ஆட்சிக் காலத்தில், **எத்தனை இந்துக்களைப் படுகொலை செய்துள்ளனர்? எத்தனை பெண்களைக் கடத்திச் சென்றிருக்கிறார்கள்? எத்தனை கோவில்களைத் தரைமட்டமாக்கி இருக்கிறார்கள்? இந்துக்களின்**

மேல் எத்தனை கொடுமைகளைக் கட்டவிழ்த்துவிட்டிருந்தார்கள்? இதற்கு ஓர் எல்லையே இல்லை! சித்தூர்ப் படையெடுப்பின் போது, முஸ்லீம்கள் கொன்று குவித்த இந்துக்களின் முப்புரிநூலின் (பூணூலின்) எடை மட்டும் எழுபத்து நாலரை மணங்கு இருந்தது. அந்தணர், அரசர், வணிகர் வகுப்பைச் சேர்ந்தவர்கள் முப்புரிநூல் அணிவார்கள். ஆக, பூணூலின் எடை இவ்வளவு என்றால், அதை அணிந்த இந்துக்களும், அணியாத இந்துக்களுமாக எத்தனைபேர் கொல்லப்பட்டு இருப்பார்கள் என்பதற்குக் கணக்கே இல்லை!

பெறுநரைத் தவிர வேறு யாரும் ஒரு கடிதத்தைப் பிரித்துப் படிக்கக்கூடாது என்பதற்காக, கடித உறையின் மேல் 74½ என்று எண்ணால் எழுதும் வழக்கம் இருந்து வந்திருக்கிறது. அந்த எச்சரிக்கையை மீறிக் கடிதத்தைப் படிப்பவர்களுக்கு, அன்றைக்குச் சித்தூரில் நடந்த மனிதக் கொலையின் பாவம் வந்து ஒட்டிக் கொள்ளுமாம். சற்றே எண்ணிப் பாருங்கள், நாட்டில் மறுபடியும் முஸ்லீம்களின் தொகை அதிகரித்து, அதனால் அவர்கள் ஆட்சியில் அமர்ந்தால், நிலைமை எவ்வளவு மோசமாக மாறிவிடும்? தேர்தல் முறைப்படி, எவர்களுடைய எண்ணிக்கை அதிகமாக இருக்கிறதோ, அவர்களுக்கே தேர்தலில் வெற்றி கிடைக்கும். அவர்களே ஆட்சியைக் கைப்பற்றுவார்கள்.

ஆகவே, நாட்டில் இந்துக்களின் தொகை, கட்டாயமாக அதிகரிக்க வேண்டும். இதில், இந்துக்கள் மட்டுமல்லாமல், எல்லாச் சமயங்களைச் சேர்ந்த மக்களுக்கும் நன்மை கிடைக்கும். காரணம், இந்து தர்மம் ஒன்றுதான் எல்லா ஜீவர்களுடைய நன்மையையும் நாடுகிறது. ‘உலக நல வேள்வி’யை இந்துக்கள்தான் நடத்துகிறார்கள். ‘வையம் துயர் தீர்கவே!’ என்றும், ‘கடல் சூழ்ந்த மண்ணுலகம் வாழ்க!’ என்றும், ‘எல்லா உயிர்களும் இன்புற்று வாழ்க!’ என்றும் முழங்குபவர்கள் இந்துக்களே. ஒவ்வோர் இல்லத்திலும்,

ஸர்வே ப$_4$வந்து ஸுகி$_2$ந:
ஸர்வே ஸந்து நிராமயா: ।
ஸர்வே ப$_4$த்$_3$ராணி பஶ்யந்து
மா கஶ்சித்$_3$ து$_3$:க$_2$ப$_4$ாக்$_3$ ப$_4$வேத் ॥

"அனைவரும் இன்பம் பெற்று வாழ்க; அனைவரும் நோயற்று வாழ்க; அனைவருக்கும் மங்களமே உண்டாகட்டும்; ஒருவரும் சிறிதுகூடத் துன்புறக் கூடாது" என்ற பிரார்த்தனையை இந்துதான் செய்கிறான். *'வாஸுதே$_3$வ ஸர்வம்'* (உலகமெலாம் இறைவன் வடிவம்) என்ற அறிவுரையும் இந்து தந்ததுதான்.

## இந்து மக்கள்தொகை குறைவுக்கு முக்கியக் காரணம்

கடந்த மக்கள்தொகை கணக்கெடுப்பின்படி, 1981–1991க்கு இடைப்பட்ட பத்தாண்டுக் காலத்தில், பாரதத்தில், முஸ்லீம்களின் ஜனத்தொகை 32.76 சதவிகிதமும், இந்துக்களின் ஜனத்தொகை 22.78 சதவிகிதமும் அதிகரித்திருக்கின்றன. நாட்டின் நலனை விரும்புகின்ற இந்து இயக்கங்கள், இது குறித்துக் கவலை கொள்வது இயற்கையானதுதான். அந்த இயக்கங்களின் கருத்துப்படி, நாட்டில் முஸ்லீம்களின் எண்ணிக்கை அதிகரிப்பதற்குக் காரணம், மதமாற்றம்தான். அதாவது, பேராசை காரணமாக, ஏராளமான இந்துக்கள் ஆண்டுதோறும் முஸ்லீம்களாக மாறுகிறார்கள். அதனால், அவர்களின் தொகை கூடுகிறது. அதனால், மதமாற்றத்தைத் தடுத்து நிறுத்துவது, மதம் மாறியவர்களை மீண்டும் தாய் மதமாகிய இந்து தர்மத்திற்குக் கொண்டு வருவது ஆகிய துறைகளில், முடிந்தவரை மடாதிபதிகளும், சாது–சந்நியாசிகளும் முயற்சி செய்ய வேண்டும். ஆனால், உண்மையான காரணம் வேறு. இந்துக்களின் எண்ணிக்கை குறைந்து போவதற்கான முக்கிய காரணம், 'குடும்பக்கட்டுப்பாடு' ஆகும். இந்தத் தரப்பில் இந்து இயக்கங்களின் பார்வை செல்லவில்லை என்பது மிகவும் வியப்பிற்குரியது; வருந்துதற்குரியது.

குடும்பக் கட்டுப்பாட்டைப் பெரும் அளவில், இந்துக்கள்தான் செய்து கொள்கிறார்கள். அது, இந்துக்களின் மேல்தான் பலவந்தமாகத் திணிக்கப்படுகிறது. அடுத்த விஷயம் என்னவென்றால், சட்டப்படி, இந்து ஒரு மனைவிக்குமேல் திருமணம் செய்து கொள்ளக்கூடாது; ஆனால், முஸ்லீம்கள் நான்கு பெண்களை மணப்பதற்கு சட்டம் இடம் அளிக்கிறது. அதனால், 'நாம் இருவர்; நமக்கு இருவர்' என்கிறான், இந்து. முஸ்லீம்களோ, 'நாம் ஐவர்; நமக்கு ஐம்பதின்மர்' என்கிறார்கள். கிறிஸ்தவ அல்லது இஸ்லாமிய நாடாக பாரதத்தை மாற்றும் முயற்சியில் தங்கள் மக்கள் தொகையைப் பெருக்கிக் கொள்வதில் மும்முரமாக ஈடுபட்டுள்ளவர்கள், அதற்காகவே, இந்துக்களை மதமாற்றமும் செய்து கொண்டிருப்பவர்கள், குடும்பக் கட்டுப்பாடு செய்துகொண்டு தங்கள் பெருக்கத்தைத் தடுப்பதற்கு முன் வருவார்கள் என்று எவ்வாறு நம்புவது?

ஒரு செவி வழிச் செய்தி, சிறிது காலத்துக்கு முன், டில்லியிலுள்ள ஒரு மசூதியில் முஸ்லீம்களுடைய கூட்டம் ஒன்று நடைபெற்றது. அப்போது, 'முஸ்லீம்கள் அதிகக் குழந்தைகளைப் பெற்றுக் கொள்ளவேண்டும்' என்று ஒரு தலைவர் கூறினாராம். 'என்னங்க இது? நாங்களோ ஏழைகள். நிறையக் குழந்தைகளை எப்படிப் பேணி வளர்ப்போம்?' என்று, கூட்டத்திலிருந்து ஒருவர் கேட்டார். அதற்கு, அந்தத் தலைவர், 'அது சரிதான். ஆனால், இப்போது கொஞ்சம் கஷ்டத்தைப் பொறுத்துக் கொள்ளுங்கள். பின்னால் இந்த இந்துக்களுடைய சொத்தெல்லாம் நமக்குத்தானே வரப்போகிறது!' என்று பதில் சொன்னார். அவர் அப்படிச் சொன்னதன் உள்நோக்கம் என்ன? 'ஏழை இந்துக்களை எல்லாம் நாம் ஏதாவது தந்திரம் செய்து முஸ்லீம்களாக மாற்றி விடுவோம்; கொஞ்சம் பொருளாதார வசதி உள்ள இந்துக்கள் குடும்பக் கட்டுப்பாடு செய்து கொண்டு, மெள்ள மெள்ளத் தம்மைத் தாமே முடித்துக் கொள்வார்கள்!' என்பதுதானே?

இது ஜனநாயக யுகம். வாக்குச்சீட்டுகளே ஆட்சிக்கு அடித்தளம் அமைக்கும் என்பதை இந்துக்கள் மறந்துவிடக் கூடாது.

சுமார் 30 ஆண்டு காலமாக, நான் குடும்பக் கட்டுப்பாட்டுக்கு எதிராகப் பேசி வருகிறேன். ஆனால், எந்தவொரு இந்து இயக்கமும், இந்த விஷயம் குறித்துத் தீவிரமான சிந்தனை செலுத்தியதாகத் தெரியவில்லை. அல்லது என் பேச்சு அவர்களுக்குச் சரியாகப்படவில்லையோ, என்னவோ! குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தின் மூலமாக வெகுவாக முயற்சி செய்து, செலவு செய்து, நேரத்தைச் செலவழித்து, பற்பல வழிமுறைகள் மூலமாக இலட்சக்கணக்கான, கோடிக்கணக்கான இந்துக்கள் பிறப்பு எடுக்கவிடாமல் தடுக்கப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

ஆனால், இந்தத் துறையில் கவனம் செலுத்தாமல், ‘இந்துக்கள் ஜனத்தொகை குறைகிறது; முஸ்லீம்கள் ஜனத்தொகை அதிகரிக்கிறது’ என்று மட்டும் கவலை தெரிவித்துக் கொண்டிருக்கிறார்களே, அதுதான் ஆச்சரியமாக இருக்கிறது! இந்துக்களின் பிறப்பு விகிதம் குறைந்து வருவது கவலைக்குரிய விஷயம் என்றால், குடும்பக் கட்டுப்பாடு என்ற திட்டத்தின் மூலமாக, வீட்டில் திறந்து கிடக்கும் இந்துக்களின் பொக்கிஷ அறையை மூடுவதற்கு முயற்சிகள் ஏன் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன? மக்கள்தொகை கட்டுப்பாட்டுக்குக் குடும்பக் கட்டுப்பாடு தேவை என்றால், மதம் மாறிச் சென்ற இந்துக்களை மீண்டும் இந்துக்களாக மாறி, இந்து ஜனத்தொகையைப் பெருக்கிக் கொள்வதற்கான முயற்சி ஏன் செய்யப்படுகிறது?

மதம் மாறிய இந்துக்களை மீண்டும் இந்து தர்மத்திற்குக் கொண்டு வருவதில், பல கஷ்டங்களை எதிர்கொள்ள வேண்டியிருக்கிறது; முயற்சி செய்யவேண்டியிருக்கிறது;

செலவுக்காகப் பணம் திரட்ட வேண்டியிருக்கிறது; நிறைய நேரம் செலவிட வேண்டியிருக்கிறது. மதம் மாறியவர்கள் மீண்டும் இந்துவாக ஆனாலும், அவர்களால், இந்துக்களுக்கு விசேஷமாக எந்த லாபமும் இல்லை. தங்களுடைய சுகபோகத்திற்காகவும், தன்னலம் கருதியும் மதம் மாறிவிடும் அளவுக்கு மாசு படிந்த உள்ளம் உடைய அவர்கள், மீண்டும் இந்து தர்மத்திற்கு வந்தாலும், என்ன நிறைவடைந்து விடுவார்கள்? எனவே, இந்துவாகப் பிறந்துள்ளவர்களை, வேறு மதத்திற்குப் போகாமல் தடுத்து நிறுத்துவதில், எவ்விதக் கஷ்டமும் இல்லை; உழைப்பும் இல்லை; செலவும் இல்லை!

மத மாற்றத்தைத் தடுப்பதற்காகச் செலவு செய்யப்படும் தொகையை, இந்துச் சிறார்களின் போஷணை பராமரிப்பு, கல்வி முதலியவற்றிற்குத் திருப்பிவிடலாம். இந்துவின் வீடுகளில் பிறப்பவர்களுக்கு, இந்து ஸம்ஸ்காரங்கள் இயல்பாகவும் நிரந்தரமாகவும் பதிவடைகின்றன. அத்துடன், மதம் மாறிச் சென்றவர்களை மறுபடியும் இந்துவாக ஆக்குவதும் நம் கையில் இல்லை. நம் கையில் உள்ள விஷயத்தை (அதிகக் குழந்தைகளைப் பெற்றுக் கொள்வதை), அதைத் தடுத்து நிறுத்த முயற்சி மேற்கொள்வதும் அறிவுடைய செயலல்ல.

செயற்கை முறையிலான குடும்பக் கட்டுப்பாடு, இந்து சமயத்தைப் பாழடித்த அளவிற்கு, மாற்று மதத்தினரைப் பாழாக்கவில்லை; அந்த அளவு அவர்களால் செயல்படவும் இயலாது. எவ்வளவு இந்துக்கள் மதம் மாறிச் சென்றிருக்கிறார்களோ, அதைக் காட்டிலும் பல மடங்கு இந்துக்கள் பிறப்பதிலிருந்து தடுக்கப் பட்டிருக்கிறார்கள். ஜனவரி 8, 1991–ல் செய்தித்தாள்களில் ஒரு செய்தி வெளியாகியிருந்தது. நாட்டில் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தினால், இது வரை ஏறக்குறைய பன்னிரண்டு கோடிக் குழந்தைகள் பிறப்பது தடுக்கப்பட்டுள்ளது! இந்தத் தகவலை, அன்றைய சுகாதார அமைச்சர் ராஜ்யசபாவில் தெரிவித்திருந்தார்.

அந்தக் காலத்தில், குடும்பக் கட்டுபாட்டுத் திட்டம் அவ்வளவு தீவிரமாகச் செயல்படுத்தப்படவில்லை. அதற்குப் பின்னர்தான், இந்தத் திட்டத்திற்கு வேகம் வந்திருக்கிறது. ஒரு குழந்தையின் பிறப்புத் தடுக்கப்பட்டால், அதன் வழியாக வரவேண்டிய சந்ததிகளும் தாமாகவே தடைப்பட்டுப் போகின்றன. ஆகவே, மத மாற்றத்தால் ஏற்படும் நஷ்டத்தைச் சரிக்கட்டிவிட முடியும். ஆனால், குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தின் மூலம் ஏற்படும் நஷ்டத்தை எவ்விதத்திலும் சரிக்கட்டவே முடியாது; இது நடக்கக்கூடியதே அன்று.

மதம் மாறிச் சென்றவர்கள் திரும்பவும் இந்து தர்மத்திற்கு வர முடியும். ஆனால், பிறப்பு எடுக்க முடியாமல் தடுக்கப் பட்டவர்கள், மறுபடியும் இந்துக்களின் வீடுகளில் பிறக்காமல், முஸ்லீம் அல்லது கிறிஸ்தவர்களின் வீடுகளிலேயே பிறப்பார்கள். மிகவும் கருணைகூர்ந்து பகவான் எந்த ஜீவர்களின் ஆன்மிக முன்னேற்றத்திற்காக மனித உடல் கொடுத்தாரோ, இந்துக்கள் அவர்களைத் தம் வீட்டுக்குள் வர விடாதபோது, அவர்கள் முஸ்லீம் அல்லது கிறிஸ்தவர் வீட்டுக்குத்தானே செல்வார்கள்?

அதிகமாகக் கடன்பட்ட காரணத்தால் இந்துக்களின் இல்லங்களில் பிறவி பெற வாய்ப்புப் பெற்ற ஜீவர்கள், இந்துக்களின் குடும்பக் கட்டுப்பாட்டு முறைகளால், பிற மதத்தினரின் வீடுகளில் சாதாரணக் கடப்பாடு காரணமாய்ப் பிறவி பெற நேர்கிறது. ஏனெனில், முஸ்லீம்களோடும் கிறிஸ்தவர்களோடும் இந்துக்களுக்கு அதிகமான தொடர்பு இருக்கிறது. அவர்களால் தயாரிக்கப்பட்ட பொருட்களைக் கொண்டு, இவர்கள் சுகபோகங்களை அடைகிறார்கள். அதனால், அவர்களுடன் கடன்கட்டு இருப்பதால், அங்கேயே அவர்கள் பிறப்பார்கள். அதாவது, மனித உடல் பெற்று வரக்கூடிய ஜீவர்களை, இந்துக்கள் தங்கள் வீட்டுக்குள் வராமல் செய்வதன் மூலம், முஸ்லீம்–கிறிஸ்தவர்களின் எண்ணிக்கையை மிக வேகமாகப் பெருகச் செய்து கொண்டிருக்கிறார்கள்.

குழந்தைப் பிறப்பைத் தடுப்பதன் மூலம், அசலான (அதாவது, பிறப்பினாலேயே) முஸ்லீம்–கிறிஸ்தவர்கள் பிறப்பதற்கு உறுதுணையாக இருக்கிறார்கள். நகலான (மதம் மாறி) முஸ்லீம்–கிறிஸ்தவராக ஆகியவர்களைத் தடை செய்ய முயன்று வருகிறார்கள்! இது, நகைப்புக்குரியதல்லவா?

## செயற்கையான கருத்தடை சாதனங்களால் ஏற்படும் தீங்குகள்

நீங்கள் எந்தக் கோணத்தில் பார்த்தாலும், உயிர் பிராணி, பதார்த்தங்கள் – இவற்றின் உற்பத்தி, பெருக்கம், போஷணை ஆகியவற்றால் லாபம்தான் உண்டாகிறது. அதுபோல, அவை குறைவதாலும் அழிவதாலும் நஷ்டம்தான் ஏற்படுகிறது. எந்த ஓர் உயிர் அல்லது பொருளின் குறைவு அல்லது அழிவு, ஸமஷ்டி சக்தியின் (கூட்டுச் சக்தியான ஈசுவரன் அல்லது பிரகிருதி) அதிகாரத்தில் உள்ளது. தனி மனிதனின் கையில் இல்லை. ஈசுவரன் அல்லது பிரகிருதியின் நியதியில் தலையிடுவது என்பது மனிதனின் அதிகார வரம்புக்கு மீறிய செயல். இதன் விளைவு மிகக் கொடுமையான அழிவாகத்தான் இருக்கும்.

வீட்டு விலங்குகளில் நாய், பூனை, குதிரை, கழுதை, ஒட்டகம் என்றும், காட்டு விலங்குகளில் நரி, குள்ளநரி என்றும் பற்பல இனங்களைச் சேர்ந்த அளவற்ற விலங்குகள் உள்ளன. அவை ஏதும் குடும்பக் கட்டுப்பாடு செய்து கொள்வதில்லை. நாய், பூனை, பன்றி முதலியன ஒவ்வொரு முறையும் பல குட்டிகள் போடுகின்றன. ஆனால், குடும்பக் கட்டுப்பாடு செய்து கொள்ளாததால், அவைகளுடைய எண்ணிக்கை பெருகியா விட்டது? அவைகள் ஏராளமான இடத்தைப் பற்றிக் கொண்டுவிட்டனவா என்ன? அப்படியானால், அவைகளின் தொகையைக் கட்டுப்படுத்துவது யார்? அவற்றின் தொகையைக் கட்டுப்படுத்துபவரே, மனிதர்களுடைய தொகையையும் கட்டுப்படுத்துபவர் ஆவர்.

இன்பத்தில் அதிகமாக ஈடுபடுவதாலும், ஆபரேஷன் செய்து கொள்வதாலும், கருக்கலைப்புச் செய்து கொள்வதாலும், உடல் இயல்பாகவே பலவீனமடைகிறது; ஆயுள் குறைந்து போகிறது. ஆகவே, விரைவில் மரணமடைவதற்குக் குறி தப்பாத 'இராமபாணம்' போன்ற இரண்டு உபாயங்கள் இருக்கின்றன— அவை இன்பச் சேர்க்கைகளில் ஈடுபடுதல் மற்றும் கருத்தடை அறுவை சிகிச்சை—கருக்கலைப்பு முதலியன செய்வித்தல்.

ஆச்சரியம் என்னவென்றால், மக்கள் மரணத்தை விரும்புவதில்லை. ஆனால், மரணத்திற்காகவே முயற்சி செய்கிறார்கள்! வீட்டைக் கொளுத்திவிட்டு, 'ஆகா! என்ன வெளிச்சம்! கையில் ஒவ்வொரு ரேகையும் நன்றாகத் தெரிகிறதே! என்று மகிழ்வடைகிறார்கள்! ஆனால், பின்விளைவை அனுபவிக்கும் போதுதான் புத்தி வரும்!

மனிதனுக்குத் தன்னுடைய உடலும் பணமும் மிகவும் விருப்பத்துக்குரியனவாகப் படுகின்றன. இவற்றிற்கு அவன் மிகவும் மதிப்புக் கொடுக்கிறான். கருக்கலைப்பு செய்து கொள்வதால் உடல் நலம் கெட்டுப் போனாலும் சரி; பணம் செலவானாலும் சரி; கருக்கலைப்பு என்னும் கொடிய பாவத்தை விடாமல் செய்கிறார்கள்! இது, அதலபாதாள வீழ்ச்சிக்கு அறிகுறியல்லவா? மனிதன்தான் செல்வத்தை உண்டாக்குகிறான்; செல்வம், மனிதனை உண்டாக்குவதில்லை. அந்தச் செல்வத்தைக் கொண்டே, அதை உற்பத்தி செய்பவனை (மனிதனை) நாசம் செய்வது எவ்வளவு பேதைமை!

கருக்கொள்ளச் செய்வதுதான் ஆண்மைக்கு இலக்கணம்; கருவை ஏற்றுக் கொள்வதுதான் பெண்மையின் இலக்கணம். ஆண்மையில்லாத ஆண்மகனும், பெண்மையில்லாத பெண்மகளும் எந்தத் தன்மையும் இல்லாதவர்கள்; வெறும் சக்கைகள்! ஆணிடத்திலும் பெண்ணிடத்திலும் உள்ள பால்தன்மையை – முக்கியப் பொருளை – இப்போது இழந்து

கொண்டிருக்கிறார்கள். ஆண்களிடம் ஆண்மையும், பெண்களிடம் பெண்மையும் இல்லாது போனால், அவர்கள் வெறும் போகப் பொருட்கள் ஆகிறார்கள்; மனிதர்களே அல்லர்.

உடலின்ப வேட்கை கொண்ட ஆண், காமவெறியனாக மாறிவிட்டான்; பெண், வேசியாகிவிட்டாள்! ஓர் ஆண், தந்தை என்ற தரத்தில் இல்லாமல் காமவெறி பிடித்தவன் என்றும், பெண், ஒரு தாய் என்ற தரத்தில் இல்லாமல் வேசி என்றும் ஆகிவிடுகிறார்களே? இதைக் காட்டிலும் பயங்கரமான வீழ்ச்சி இருக்க முடியுமா? மனிதர்கள், மனிதனைப் பெற முடியாவிட்டால், அவர்கள் மனிதர்களே அல்லர்; வெறும் நாடகப் பாத்திரங்கள். அவர்களைக் காட்டிலும் விலங்குகள் நல்லவைகள். காரணம், அவை சந்ததிகளைப் பெற்றெடுக்கும் சக்தி படைத்திருக்கின்றன!

கீதையில், அசுர இயல்பு கொண்ட மனிதர்களைப் பற்றி இவ்வாறு கூறப்பட்டிருக்கிறது—

*சிந்தாமபரிமேயாம் ச ப்ரலயாந்தாமுபாஸ்ரிதா: |*
*காமோபபே$_4$ாக$_3$பரமா ஏதாவதி$_3$தி நிஸ்சிதா: ||*

***(கீதை 16/11)***

"அசுரத் தன்மை கொண்ட மனிதர்கள், மரண காலம் வரை தொடர்கின்ற எண்ணற்ற கவலைகளைப் பற்றிக் கொண்டு, போகங்களை அனுபவிப்பதையே நாட்டமாகக் கொண்டவர் களாகவும், சுகமெல்லாம் இவ்வளவுதான் என்ற தீர்மானம் கொண்டவர்களாகவும் இருக்கிறார்கள்."

இக்காலத்தில், இப்படிப்பட்ட அசுரத் தன்மை கொண்ட மக்கள்தான் முதன்மை பெற்று வருகின்றனர். 'நாடு எக்கேடாவது கெட்டுத் தொலையட்டும்! நாம் சுக போகங்களை அனுபவிப்போம்; பொருள் குவிப்போம்!' என்பதுதான் அவர்கள் எண்ணம். அவர்கள், தங்கள் சுகத்திற்காகத் தம் குழந்தைகளைக்கூட அழித்துவிடுகிறார்கள். அவர்களுக்கு,

நிகழ்கால இன்பத்தில்தான் கருத்து இருக்கிறது. 'எதிர்காலத்தில் துக்கம் வந்தால் வரட்டுமே?' என்ற அலட்சியம்.

பரலோகத்தில் எவ்வளவு துன்பம் அனுபவிக்க வேண்டியிருக்கும் என்பதைப் பற்றிய அறிவே கிடையாது. இந்த உலகத்திலேயே, எத்தனையோ துன்பம் அனுபவிக்க நேரிடுமே, அதைப் பற்றியும் கவலையில்லை. மரணம் என்பது நிச்சயம் என்று அறிந்துமே, குழந்தைத் தடுப்புச் செய்வித்துக் கொள்கிறார்களே, எவ்வளவு பேதமை! இப்போதுள்ள ஒன்றிரண்டு குழந்தைகளும் இறந்துப் போனால், நிலைமை என்ன ஆகும்? என்பது பற்றிச் சிந்தனையே இல்லை!

குடும்பக் கட்டுப்பாட்டு வசதிகளால் மக்களின் ஒழுக்கம் கெடுகிறது. குழந்தைத் தடுப்புக்கான செயற்கை முறைகளின் பிரசாரத்தால் சமுதாயத்தில், விபசாரம் அதிகரித்துக் கொண்டிருக்கிறது. கருக்கொள்வதைத் தடுப்பது அல்லது கலைப்பதற்கான உபாயங்கள் தெரிந்திருப்பதால், கன்னிப்பெண்களும் விதவைகளும் வழிதவறிச் சென்று வீழ்ச்சி அடைந்து கொண்டிருக்கிறார்கள். அளவான குடும்பம்தான் வேண்டும் என்பது அரசின் கொள்கையானால், குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டம் என்ற பெயரில் மக்களைக் காமக் கேளிக்கைகளில் ஈடுபடுத்தாமல், புலனடக்கம், பிரம்மசரியம் காத்தல் போன்ற வழிகளைக் கடைப்பிடிக்குமாறு தூண்டிவிட வேண்டும்.

முதலிலேயே, மக்களிடம் புலனின்ப நாட்டம் என்ற தீ இருந்து கொண்டுதான் இருக்கிறது. கருத்தடை அறுவை சிகிச்சை (நரம்புக்கட்டு), ஆண்உறை (நிரோத்) முதலிய செயற்கை முறை உபாயங்களைப் பிரசாரம் செய்து, அந்தத் தீயில் நெய் வார்ப்பது எவ்விதம் சரியாகும்? புலனடக்கம், பிரம்மசரியம் முதலியவற்றைப் பிரசாரம் செய்தால், மக்களுடைய உடல்நலம் ஓங்கும்; அவர்கள்,

காமவெறியர்களாக, குற்றம் புரிகிறவர்களாக, ஒழுக்கம் கெட்டவர்களாக, வேலை செய்யாதவர்களாக ஆகாமல், நல்லொழுக்கம் கொண்டவர்களாகவும், உழைப்பு மிக்கவர் களாகவும் ஆவார்கள். அதனால், நாடு உள்ளே வெறும் கூடாக இல்லாமல், பலம் பொருந்தியதாகும்.

ஒழுக்கம், பணம் – இவற்றில் எது மேலானது? என்பதைச் சிந்தித்துப் பாருங்கள். ஏராளமான மக்கள் தர்மத்தைக் காப்பாற்றுவதற்காக உயிரையும் தியாகம் செய்திருக்கிறார்கள் என்றால், தர்மம் சிறந்ததா? இல்லை, இந்த உடலா?† 'பணம் கெட்டுப் போனால், அதனால் எதுவும் நஷ்டமில்லை; உடல்நலம் கெட்டால், ஏதோ கொஞ்சம் போச்சு; ஒழுக்கம் கெட்டால், எல்லாமே போச்சு!' என்று, ஓர் ஆங்கிலப் பழமொழி இருக்கிறது. ஒழுக்கம் குன்றிப் போவதைக் காட்டிலும், நாட்டுக்குப் பெரிய வீழ்ச்சி என்ன இருக்க முடியும்?



---

† ***ந ஜாது காமாந்ந ப$_4$யாந்ந லோப$_4$ாத்$_3$–***
***த$_4$ர்மம் த்யஜேஜ்ஜீவிதஸ்யாபி ஹேதோ: ।***
***நித்யோ த$_4$ர்ம: ஸுக$_2$து$_3$:கே$_2$ த்வநித்யே***
***ஜீவோ நித்யோ ஹேதுரஸ்ய த்வநித்ய: ॥***
***(மஹாபாரதம், ஸ்வர்காரோஹண பர்வம் 5/63)***

'காமம், அச்சம், பேராசை காரணமாகவோ, அல்லது உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காகவோ, தன்னுடைய தர்மத்தை விட்டுவிடக் கூடாது. ஏனெனில், தர்மம் நித்தியமானது; சுகதுக்கங்கள் அநித்யமானவை. இவ்விதமே, ஜீவாத்மா நித்ய வஸ்து; அதன் பந்தத்திற்குக் காரணமான ஆசை நிலையற்றது.'

|| ஸ்ரீஹரி: ||

# 4. அரசரின் கடமை

சமுதாயத்தை ஒரு கட்டுக்கோப்புக்குள் வைத்துக்கொள்ளும் பொறுப்பு, சமுதாயத்தின் கையில் இருக்கிறதே தவிர, ஆட்சியாளரிடம் இல்லை. அதனால், சமுதாயக் கட்டுப்பாடுகளை ஏற்படுத்துவது, அரசனின் கடமையன்று. திருமணம், வணிகம், வாழ்க்கை முறை, குழந்தை பெறுதல், வருணாசிரம தர்மங்களைக் கடைப்பிடித்தல் முதலியன, மக்களுடைய தர்மங்கள். மக்களுடைய அறநெறிகளில் தலையிடுவது, அரசனின் வேலையன்று. அப்படி அரசன் தலையிட்டால், அது மிகவும் அநியாயம். குடிமக்களைக் காப்பாற்றுவதும், அவர்கள் மூலமாக உறுதியாகத் தர்மத்தைக் காப்பாற்றுவதும்தான், அரசனின் தலையாய கடமை.

யாரும் அறநெறிகளை மீறக்கூடாது என்பதற்காக தர்மத்தை பின்பற்றச் செய்வது, அரசனின் பொறுப்பு. ஆனால், அறநூல் விதிகளுக்கு முரணாகச் சட்டம் போடுவது என்பது, அரசன் செய்யும் கொடுமையான அநீதி. இந்து, ஒருவருக்குமேல் திருமணம் செய்து கொள்ளக்கூடாது; இந்த வயதுக்கு மேல்தான் மணம் செய்து கொள்ளவேண்டும்; இரண்டுக்கு மேல் குழந்தை பெற்றுக் கொள்ளக்கூடாது போன்ற சட்டங்கள் இயற்றுவது, அரசனின் உரிமையன்று.

தன்னுடைய நாட்டில் பிறக்கிற அத்தனை நபர்களுடைய வாழ்க்கைக்குத் தேவையான ஏற்பாடுகளைச் செய்வதுதான் அரசனின் கடமை. மாறாக, அவர்கள் பிறக்கவே முடியாமல் தடை செய்வதன்று. தங்களுடைய மதம், வருணம், ஆசிரமம், ஜாதி முதலியவற்றிற்கேற்ப நடப்பது, குடிமக்களின் உரிமை. குடிமகன், மதம், வருணாசிரமம் முதலியவற்றுக்கு எதிராகச் சென்றால், அரசு அதிகாரத்தைக் காட்டி, அவனை அந்த எல்லைக்குள் கொண்டு வருவது, அரசனின் கடமை.

*ஏஷ ராக்ஞாம் பரோ த$_4$ர்மோ*
*ஹ்யார்தாநாமார்திநிக்$_3$ரஹ: |*
***(ஸ்ரீமத் பாகவதம் 1/17/11)***

"துன்பமடைந்தவர்களின் துன்பத்தைத் துடைப்பதுதான் அரசனது முதற்கடமை."

*ராக்ஞோ ஹி பரமோ த$_4$ர்ம:*
*ஸ்வத$_4$ர்மஸ்த$_2$ாநுபாலநம் |*
*ஶாஸதோऽந்யாந் யத$_2$ாஶாஸ்த்ரம்*
*அநாபத்$_3$யுத்பத$_2$ாநிஹ ||*
***(ஸ்ரீமத் பாகவதம் 1/17/16)***

"அபாயமின்றி அமைதியாக இருக்கும் சமயத்தில் அறநெறிக்குப் புறம்பாக நடப்பவர்களையும், பிற தீயநெறிகளில் செல்வோர்களையும் தண்ட நீதிப்படி தண்டிப்பதும், தத்தம் அறநெறியில் ஒழுகுவோர்களைக் காப்பதும் அரசனது முதற்கடமை."

***ய உத்$_3$த$_4$ரேத்கரம் ராஜா***
***ப்ரஜா த$_4$ர்மேஷ்வஶிக்ஷயந் |***
***ப்ரஜாநாம் ஶமலம் பு$_4$ங்க்தே***
***ப$_4$க$_3$ம் ச ஸ்வம் ஜஹாதி ஸ: ||***
***(ஸ்ரீமத் பாகவதம் 4/21/24)***

"எந்த அரசன், தன் மக்களை நல்வழியில் நடத்திச் செல்லாது, கப்பம் மட்டும் பெறுகிறானோ, அவன் பிரஜைகளின் பாவப்பயனை அனுபவிக்கிறான். தன் புண்ணியத்தையும் இழக்கிறான்."

***ஶ்ரேய: ப்ரஜாபாலநமேவ ராக்ஞோ***
***யத்ஸாம்பராயே ஸுக்ருதாத் ஷஷ்ட$_2$மம்ஶம் |***
***ஹர்தாந்யத$_2$ா ஹ்ருதபுண்ய: ப்ரஜாநா-***
***மரக்ஷிதா கரஹாரோऽக$_4$மத்தி ||***
***(ஸ்ரீமத் பாகவதம் 4/20/14)***

''மக்களைக் காத்துப் பரிபாலிப்பதுதான் அரசனுக்கு நலமளிப்பது. ஏனெனில், மக்கள் செய்யும் நற்செயல்களின் புண்ணியத்தில் ஆறில் ஒரு பங்கை அரசன் பெறுகிறான். இதற்குமாறாக, மக்களைக் காத்து ரட்சிக்காமல் அரசன் வரிவசூல் செய்வானாகில், அவனது புண்ணியங்கள் அனைத்தையும் மக்கள் பெறுகிறார்கள். மக்கள் செய்யும் தீவினைகளின் பயனை அரசன் அடைகிறான்.''

*யஸ்ய ராஷ்ட்ரே ப்ரஜா: ஸர்வா–*
*ஸ்த்ரஸ்யந்தே ஸாத்$_4$வ்யஸாது$_4$பி$_4$: ।*
*தஸ்ய மத்தஸ்ய நப்ஶ்யந்தி*
*கீர்திராயுர்ப$_4$கே$_3$ா க$_3$தி: ॥*

***(ஸ்ரீமத் பாகவதம் 1/17/10)***

''எந்த அரசனது ஆட்சியில் தீயோர்களைக் கண்டு மக்கள் பயமடைகிறார்களோ, அந்த மதங்கொண்ட மனிதனின் புகழ், ஆயுள், செல்வம், மேலுலகம் (உயர்ந்த கதி) ஆகியனவெல்லாம் அழிகின்றன.''

***ஜாஸு ராஜ ப்ரிய ப்ரஜா து$_3$க$_2$ாரீ ।***
***ஸோ ந்ருபு அவஸி நரக அதி$_4$காரீ ॥***

***(ஸ்ரீராமசரிதமாநஸம், அயோத்யா காண்டம் 71/3)***

குடிமக்களை ஆள்பவன், அரசன்; அரசனை ஆள்பவர்கள், பந்தபாசமில்லாத சாது–மகாத்மாக்கள். தர்மத்தின் மீதும், தர்மாசார்யர்கள் மீதும் அரசனின் ஆணை செல்லாது. அவர்கள் மீது ஆணை செலுத்துவது, அரசன் செய்யும் பெரிய அநீதியாகும். அவர்கள், அரசனை அடக்கி வைத்திராவிட்டால், அரசன் கட்டவிழ்த்துவிடப்பட்டவனாகி விடுவான். அறிவில்லாத மன்னன்தான், தர்மம் மற்றும் தர்மாசார்யர் மீது ஆட்சி செய்வான்; அவர்கள் மீது தன் ஆணையைச் செலுத்துவான். ஏனெனில், 'தனக்கு மட்டும்தான் புத்தி இருக்கிறது' என்று அவன் நினைத்துக் கொள்கிறான்; 'உலகில் மற்றும் பல அறிவாளிகள் இருப்பார்கள்' என்பதுகூட அவனுக்குத் தெரியவில்லை!

முற்காலத்தில், நமது தேசத்தை மன்னர்கள்தான் ஆண்டு வந்தார்கள் என்றாலும், ரிஷி–முனிவர்களிடம் ஆலோசனை கேட்டு நடந்தார்கள். ஏனெனில், சரியான யோசனை முற்றும் துறந்த மேலோர்களிடமிருந்துதான் கிடைக்குமே தவிர, போக புருஷர்களிடமிருந்து அன்று. அதனால், சட்டம் இயற்றும் அதிகாரம், முற்றும் துறந்த மேலோர்களுக்குத்தான் உண்டு. மாமன்னர் தசரதரும், பகவான் ஸ்ரீராமனும்கூட, ஒவ்வொரு விஷயத்திலும் ஆசார்யரான வசிஷ்டருடைய கருத்தைக் கேட்டு, அவர் ஆணைப்படியே செயலாற்றி வந்தார்கள்.

ஆனால், இந்நாட்களில் ஆட்சியாளர்கள், மகாத்மாக்களின் கருத்தைக் கேட்பது என்பது கிடக்கட்டும். மாறாக, அவர்களை நிராகரித்து அவமானப்படுத்துகிறார்கள். அதிக வாக்குச்சீட்டுகளைப் பெறுவதிலும் சுயநலத்திலும் தோய்ந்துவிட்ட ஆட்சியாளர்களால் நிறைவேற்றப்படும் சட்டங்கள் எப்படி நியாயமானவையாக இருக்க முடியும்?

தர்மம் இல்லாத அரசியல் விதவைக்கு சமம்; அரசநீதி சாராத தர்மம், மனைவியை இழந்த கணவனுக்குச் சமம். ஆகவே, தர்மமும் ராஜநீதியும் கைக்கோத்துக் கொண்டு, இணைந்து சென்றால்தான், அந்த ஆட்சி மேலானதாக இருக்கும். உயர்ந்த அரசாட்சிக்குச் சிறந்ததொரு முன்னுதாரணம் அசுவபதி மன்னரின் சொற்களில் காணக் கிடைக்கிறது.

**ந மே ஸ்தேநோ ஜநபதே$_3$**
**ந கத$_3$ர்யோ ந மத்$_4$யப: ।**
**நாநாஹிதாக்$_3$நிர்நாவித்$_3$வாந்ந**
**ஸ்வைரீ ஸ்வைரிணீ குத: ॥**

***(சாந்தோக்ய உபநிஷத் 5/11/15)***

''எனது நாட்டில் திருடன் இல்லை; கருமி இல்லை; குடிகாரன் இல்லை; அக்னி ஹோத்ரம் செய்யாதவன் இல்லை; புலமை பெறாதவன் இல்லை; பிற பெண்களை நாடுபவன்

இல்லை. எனவே, நடத்தை கெட்டவளைப் பற்றிய பேச்சே இல்லை!'

அதிக வாக்குச் சீட்டுகளைப் பெறுவதற்காக தமக்குள் சண்டை போட்டுக் கொள்கிறவர்கள்; சூழ்ச்சி செய்பவர்கள்; மக்களுக்குப் பணம் கொடுத்தும், இனிமையாகப் பேசி மயக்கியும் ஓட்டுப் பெறுகிறவர்கள் – இப்படிப்பட்டவர்கள் நீதியான ஆட்சி செய்வார்கள் என்று எப்படி எதிர்பார்க்க முடியும்? தலைவர்களாக இருப்பவர்கள் ஓட்டுப்பெறும் வரை, வந்துபோய்க் கொண்டிருப்பார்கள். அதன்பின் (ஆட்சியில் அமர்ந்ததும்) மக்களைப் பற்றிக் கவலைப்படவே மாட்டார்கள்! ஓட்டுச் சேகரிப்பதற்காக இங்குமங்கும் காரில் அலைவார்கள்; பெட்ரோலை வீணாக்குவார்கள்; லட்சம்–கோடிக்கணக்கில் பணம் செலவு செய்வார்கள்; தங்களுடைய மற்றும் மக்களுடைய நேரத்தைப் பாழாக்குவார்கள்!

ஆனால், ஓட்டுகள் பெற்று ஆட்சிப் பீடத்தில் அமர்ந்ததும், 'என்ன, தம்பி சௌக்கியமா? உங்கள் உதவியால்தான் எனக்குப் பதவி கிடைத்திருக்கிறது. உங்கள் வீட்டில் ஏதாவது கஷ்டம் இருந்தால் சொல். எப்படி உன் வாழ்க்கை ஓடிக் கொண்டிருக்கிறது?' என்று, ஒரு வார்த்தை கூடக் கேட்க மாட்டார்கள்! முன்னாளில் ஆட்சி செய்த மன்னர்கள், அரசின் செல்வத்தைத் தம்முடையதாகக் கருதாமல், குடிமக்களுடையதாகவே கருதி, அவர்கள் நலனுக்காகவே செலவிட்டார்கள். மக்களின் நலனுக்காகவே, அவர்கள் வரிவசூல் செய்தனர். சூரியகுல மன்னர்களைப் பற்றி, மகாகவி காளிதாசர் எழுதுகிறார்—

***ப்ரஜாநாமேவ பூ$_4$த்யர்த$_2$ம் ஸ***
***தாப்$_4$யோ ப$_3$லிமக்$_3$ரஹீத் ।***
***ஸஹஸ்ரகு$_3$ணமுத்ஸ்த்ரஷ்டு–***
***மாத$_3$த்தே ஹி ரஸம் ரவி: ॥***

***(ரகுவம்ஸம் 1/18)***

''சூரியன், பூமியிலிருந்து நீரை எடுத்து, அதை ஆயிரம் மடங்காக்கி, மழையைப் பொழிவிப்பது போல, சூரிய குல மன்னர்கள், குடிகளின் நலனுக்காகவே அவர்களிடமிருந்து வரிவசூலித்தார்கள். அதாவது, தாங்கள் வசூலித்ததைக் காட்டிலும் அதிகமாகவே கொடுத்தார்கள்.''

மன்னர்களிடம் சுயநல எண்ணம் தோன்றி, குடிகளின் செல்வத்தைத் தாங்களே அனுபவிக்கத் தொடங்கியதும், வழிவழியாக, ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக நடைபெற்று வந்த ஆட்சி கைநழுவிப் போயிற்று. இன்றைக்கு என்ன நிலைமை? பொய்–புனைந்துரைகளால் வெற்றி பெற்று ஆட்சிக்கு வந்துள்ள தலைவர்கள், 'நாம் ஐந்து ஆண்டுகள்தான் இந்த நாற்காலியில் இருக்கப் போகிறோம். பின்னால் என்ன நடக்குமோ தெரியாது. அதனால், எவ்வளவு சேர்க்க முடியுமோ, அவ்வளவையும் சேர்த்துவிட வேண்டும்! நாடு எப்படி போனால் நமக்கென்ன?' என்று எண்ணுகிறார்கள்.

அதனால், 'பணக்காரர்களிடமிருந்து பணத்தைப் பிடுங்குவது எப்படி?' என்று சிந்தித்து, அதற்கேற்றபடி சட்டங்களைப் போடுகிறார்கள். 'எல்லோரும் ஒரேயடியாக திடீரென்று எப்படிப் பணக்காரர்களாக ஆக முடியும்?' என்று அவர்கள் எண்ணிப் பார்ப்பதேயில்லை. மகாபாரதத்தில்,

***யத$_2$ா மது$_4$ ஸமாத$_3$த்தே***
***ரக்ஷந் புஷ்பாணி ஷட்பத$_3$: ।***
***தத்$_3$வத$_3$ர்த$_2$ாந்மநுஷ்யேப்$_4$ய***
***ஆத$_3$த்$_3$யாத$_3$விஹிம்ஸயா ॥***

***(உத்யோக பர்வம் 34/17)***

என்று வருகிறது.

''தேனீ, மலருக்குச் சேதம் விளைவிக்காமல் தேனைச் சேகரிப்பது போல், அரசன், குடிகளுக்குக் கஷ்டம் கொடுக்காமல், அவர்களிடமிருந்து வரிவசூலிக்க வேண்டும்.''

ஆனால், இன்றைக்குச் செல்வந்தர்களிடமிருந்து பணத்தைப் பறிப்பதற்காக, அவர்களுடைய வீடுகளிலும் வியாபார நிலையங்களிலும் சீல் வைக்கிறார்கள், ஆட்சியாளர்கள்! இது ஒருவகை கொள்ளை இல்லையா? அதனால், செல்வந்தர்கள் வரிவிதிப்பிலிருந்து தப்புவதற்கு வகைவகையான பொய்–புரட்டுகளைக் கற்றுக் கொள்கிறார்கள். இருதரப்பினருமே, இம்மாதிரி நடவடிக்கைகளால், எதிர்காலத்தில் நாட்டின் நிலைமை என்னவாகும்? என்று, நாட்டு நலனைப் பற்றி எண்ணிப் பார்ப்பதே இல்லை.

செல்வந்தர்களிடமிருந்து பலவந்தமாகப் பணத்தை எடுத்துக் கொள்வதற்கு அரசு முயன்றால், செல்வந்தர்கள் உள்ளத்திலும் பணத்தை மறைத்து வைத்துக் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் கட்டாயம் ஏற்படும். ஆதலால் அரசு, செல்வந்தர்களிடமிருந்து பணத்தைக் கட்டாயப்படுத்தி எடுத்துக் கொள்ளாமல், அவர்கள் இதயத்தில் தாராள, பரோபகார எண்ணங்களை விழிப்படையச் செய்ய வேண்டும். இத்தகைய எண்ணத்தை முற்றும் துறந்த மேலோர்களால்தான் உண்டாக்க முடியும்.

தற்போதைய அரசியல் யுக்திகள், போராட்டத்தைத் தூண்டுவனவாக உள்ளன. 'எங்களுக்கு ஓட்டுப் போடுங்கள். அந்தக் கட்சிக்கு ஓட்டுப் போடாதீர்கள். அது மோசமான கட்சி' என்றவுடன் சச்சரவு ஆரம்பாகி விடுகிறது. வாக்களிக்கும் முறையில், மடமைதான் தலைதூக்கி நிற்கிறது. மடமை மலிந்துள்ள சமுதாயத்தில்தான் வாக்குப்பதிவு முறை அமல் செய்யப்படுகிறது. மகாத்மா காந்திக்கும் ஓர் ஓட்டு; ஆடு மேய்ப்பவனுக்கும் ஓர் ஓட்டு; நல்லவருக்கும் ஓர் ஓட்டு; தீயவனுக்கும் ஓர் ஓட்டு! இத்தகைய சமத்துவம் மடமையின் விளைவு!

வாக்குப்பதிவு நடைமுறையிலும் கூட, ஓரவஞ்சனைக்கு வழி இருக்கிறது. ஆட்சிபீடத்தில் அமர்ந்துள்ளவர்கள், ஓட்டுப்

பதிவில் நிறைய தில்லுமுல்லு செய்கிறார்கள். அதிக வாக்குகளைப் பெற வேண்டும் என்பதற்காக, பிற மதங்களைச் சேர்ந்தவர்களுக்கு ஆதரவாகப் பேசுகிறார்கள்; சமுதாயத்தை முள் போலத் துன்புறுத்துபவர்களின் ஆதரவைத் தேடுகிறார்கள்; குற்றவாளிகளின் உதவியை நாடுகிறார்கள். இந்த விஷயம் யாருக்கும் தெரியாதது அன்று.

உண்மையில், வாக்களிக்கும் உரிமையும், ஆட்சியில் அமர்பவர்களைத் தேர்ந்தெடுக்கும் உரிமையும், சமூகப் பணியாற்றுபவர்கள், தன்னலம் துறந்தவர்கள், தர்மாத்மாக்கள், நன்னடத்தை உடையவர்கள், பிறருக்கு உதவும் இயல்பு கொண்டவர்கள் போன்றவர்களுக்கு மட்டுமே உண்டு. அவர்களிலும் சிறப்பாக ஜீவன்முக்தர்கள், தத்துவஞானிகள் போன்ற மகான்களுக்கே உண்டு. வீட்டு விஷயங்களில் யாரும் சிறுவர்களைக் கலந்தாலோசித்து முடிவு செய்வதில்லை. ஏனெனில், சிறுவர்களுக்கு அறிவும் அனுபவமும் குறைவு. ஆனால், இன்றைய வாக்களிப்பு முறையில் ஓர் அறிவாளிக்குத் தொண்ணூற்றொன்பது வாக்குகளும், ஒரு மடையனுக்கு நூறு வாக்குகளும் கிடைத்தால், ஒரு வாக்கு அதிகம் பெற்றதால், மடையன் வெற்றி பெறுகிறான்; அறிவாளி தோல்வி அடைகிறான்!

ஆனால் உண்மையில், நூறு மடையர்கள் ஒன்று சேர்ந்தாலும், ஓர் அறிவாளிக்கு ஈடாக முடியாது. நடைமுறையிலுள்ள வாக்குரிமைத் திட்டத்தின்படி, எவருக்கு அதிக எண்ணிக்கை கிடைக்கிறதோ, அவர் வெற்றி பெற்று அரசு செலுத்துகிறார். எவருக்குக் குறைந்த வாக்குகளோ, அவர் தோல்வி அடைகிறார். சிந்தித்துப் பாருங்கள்! சமுதாயத்தில் அறிஞர்களின் எண்ணிக்கை அதிகமா? அல்லது அறிவிலிகளின் எண்ணிக்கை அதிகமா? நல்லோர்களின் எண்ணிக்கை அதிகமா? அல்லது தீயோர்களின் எண்ணிக்கையா? நன்றியுடையோர் எண்ணிக்கை அதிகமா?

அல்லது நன்றியில்லாதவர் எண்ணிக்கையா? ஆசிரியர்களின் எண்ணிக்கை அதிகமா? அல்லது மாணவர்களின் எண்ணிக்கையா? எவர்களுடைய எண்ணிக்கை அதிகமோ, அவர்கள்தான் அதிக வாக்குகள் பெற்று வெற்றியடைவார்கள்; நாட்டில் ஆட்சி செலுத்துவார்கள்! பின்னர், நாட்டின் நிலைமை என்னவாகும் என்று சிந்தித்துப் பாருங்கள்.

இப்புத்தகத்துடன் மேலும் தவறாமல் படிக்கவேண்டிய மூன்று புத்தகங்கள்—

1. பிள்ளைகளின் கடமைகள் & மகாபாவத்திலிருந்து உன்னைக் காத்துக்கொள்.
2. நாட்டின் இன்றைய நிலையும், அதன் விளைவுகளும்.
3. தாய்மையின் அவல நிலை

**|| ஓம் தத் ஸத் ||**





॥ ஸ்ரீஹரி: ॥

# கீதா பிரஸ்ஸின் வெளியீடுகள்

## பாராயண நூல்கள்

| | Code No. | |
|---|---|---|
| 1. | 743 | ஸ்ரீமத் பகவத்கீதா மூலம் [சம்ஸ்கிருதம்–தமிழ்] |
| 2. | 793 | ஸ்ரீமத் பகவத்கீதா [தமிழ் மூலம்] & விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் [தமிழ் மூலம்] |
| 3. | 795 | ஸ்ரீமத் பகவத்கீதா – பொழிப்புரை |
| 4. | 1918 | ஸ்ரீமத் பகவத்கீதை [மூலம்–பொழிப்புரை] [கையடக்கப் பிரதி] |
| 5. | 823 | ஸ்ரீமத் பகவத்கீதா [மூலம் [சம்ஸ்கிருதம் – தமிழ்] – பதவுரை–பொழிப்புரை] |
| 6. | 800 | ஸ்ரீமத் பகவத்கீதா–தத்துவவிவேசனீ [மூலம் [சம்ஸ்கிருதம்–தமிழ்] – பதவுரை–பொழிப்புரை–விளக்கவுரை] |
| 7. | 389 | கீதா மாதுர்யம் [ஸ்ரீமத் பகவத்கீதா – வினா-விடை] |
| 8. | 1426 | ஸ்ரீமத் பகவத்கீதா – ஸாதக ஸஞ்ஜீவனீ [மூலம் [சம்ஸ்கிருதம் – தமிழ்] – பதவுரை – விளக்கவுரை] [1 முதல் 9 அத்தியாயங்கள்] |
| 9. | 1427 | [10 முதல் 18 அத்தியாயங்கள்] |
| 10. | 600 | ஸ்ரீஹநுமாந் சாலீஸா [கையடக்கப் பிரதி] [தமிழ் மூலம் – மொழிபெயர்ப்பு] |
| 11. | அச்சில் | ஸ்ரீஹநுமாந் சாலீஸா (Small Size) |
| 12. | 794 | விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் [தமிழ் மூலம்] |
| 13. | 1256 | அத்யாத்ம ராமாயணம் [தமிழ் மொழிபெயர்ப்பு] |
| 14. | 1606 | ஸ்ரீமந் நாராயணீயம் [தமிழ் மூலம்–விளக்கவுரை] |
| 15. | 1904 | சுந்தர காண்டம் [ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்] [தமிழ் மூலம் – மொழிபெயர்ப்பு] |
| 16. | 1618 | சுந்தர காண்டம் [ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்] – பொழிப்புரை |
| 17. | 1890 | கம்ப ராமாயணம் – சுந்தர காண்டம் [பாடல்கள்] |
| 18. | 1788 | ஸ்ரீ முருகன் துதிமாலை [தோத்திரத் தொகுப்பு] |
| 19. | 1789 | திருப்பாவை விளக்கம் |
| 20. | 1912 | விரத கல்ப த்ரயம் |

## ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

[ தமிழ் மூலம் – மொழிபெயர்ப்பு ]

21. 1902 முதல் பாகம் [பால–அயோத்தியா காண்டம்]
22. 1903 இரண்டாவது பாகம் [ஆரண்ய–கிஷ்கிந்தா]
23. 1904 மூன்றாவது பாகம் [சுந்தர காண்டம்]
24. 1905 நான்காவது பாகம் [யுத்த காண்டம்]
25. 1906 ஐந்தாவது பாகம் [உத்தர காண்டம்]

## ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

[ தமிழ் மொழிபெயர்ப்பு ]

26. அச்சில் முதல் பாகம் [பால–கிஷ்கிந்தா காண்டம்]
27. ,, இரண்டாவது பாகம் [சுந்தர–உத்தர காண்டம்]

## ஸ்ரீமத் பாகவத மகாபுராணம்

[ தமிழ் மூலம் – மொழிபெயர்ப்பு ]

28. அச்சில் முதல் பாகம் [1 முதல் 4வது ஸ்கந்தம் வரை]
29. ,, 2வது பாகம் [5 முதல் 9வது ஸ்கந்தம் வரை]
30. ,, 3வது பாகம் [10 முதல் 12வது ஸ்கந்தம் வரை]

எங்களது நிறுவனம் ஆன்மீகம் மற்றும் மானிட நல்லொழுக்கம் வளர உதவும் நூல்களை தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், ஹிந்தி, ஆங்கிலம், சம்ஸ்கிருதம், உருது, குஜராத்தி, மராத்தி, பெங்காலி, ஒரியா, அஸ்ஸாமியா மற்றும் நேபாளி மொழிகளில் பல ஆண்டுகளாக வெளியிடுகிறோம் என்பதை மிக்கப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

***எங்களது தமிழ்நாடு கிளை :***

கீதா பிரஸ் புத்தக நிலையம், கீதா பிரஸ் மேன்ஷன்,
**8/1 M**, ரேஸ் கோர்ஸ் சாலை,
(தாமஸ் பார்க் பஸ்–ஸ்டாப் அருகில்),
கோயம்புத்தூர் – **641 018.**
**Ph. : 0422–3202521**

website : **www.gitapress.org** | e-mail : **booksales @ gitapress.org**